# அருணோதயம்

சமூக திரைப்படம்

கதை—வசனம்

"பாமினி"



விஜயா பிரசுரம்
4/21, பொன்னுசாமி நாயக்கன் தெரு,
இராயப்பேட்டை : : சென்னை-14

மலிவுப்பதிப்பு] [விலை 50 புதுக்காசு.

முதற் பதிப்பு ஜூலை 1959



# வாழ்த்துரை

"விஜயா பிரசுரம்" என்ற பதிப்பகம் ஒன்று துவக்கப்பட்டிருப்பது கண்டு மிகவும் மகிழ்கிறேன். நாட்டுக்குத் தேவையான நல்ல நூல்கள் பலவற்றை வெளியிட்டு, பதிப்பகத்தார் நற்பணி செய்யவேண்டுமென்பது என் ஆவல். அந்த அவா நிறைவேறுமென்று எதிர்பார்க்கிறேன்.

வணக்கம்.

சி. என். அண்ணாதுரை, M.A., M.L.A.

முத்தமிழ் அரசி அச்சகம், மயிலாப்பூர், சென்னை-4. (தமிழ்நா(

# மதிப்புரை



"அருணோதயம்" என்னும் திரைப்பட நூலை நான் முற்றிலும் படித்துப் பார்த்தேன். இந்நூல் தன் பெயருக் கேற்பத் திரைப்படத்திற்கு எல்லாப்படியாலும் ஏற்றதே. இஃது உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை. கதைப் போக்குக் காண்போர்க்கும், படிப்போர்க்கும் இன்பந்தர வல்லதாக உள்ளது. இது திரைப்பட உலகில் விரைவில் வெளி வந்து, பொதுமக்களை மகிழ்விக்கும் என்று நம்புகிறேன். இதனை எழுதிய திருமதி "பாமினி" அம்மை யார், இதுபோன்று இன்னமும் பல திரைப் படநூல்களை எழுதித் திரைப்பட உலகிற்குத் தொண்டு செய்ய யான் வழிபடும் முழு முதற் பரம்பொருளாம் அம்மை அப்ப னது அணிமலர் அடிதனை வந்தித்து வாழ்த்தி வணங்கு கின்றேன்.

**பேராசிரியர். வித்துவான் பாலூர் கண்ணப்பர் B. O. L.**
(Member Board of Studies in Tamil, Madras University.)

# பதிப்புரை

**விஜயா பிரசுரம்** தமிழ்பேசும் இல்லங்களிலெல்லாம் அபிமானம் பெற்ற பெயராகத் திகழவேண்டும். அதன் ஒவ்வொரு வெளியீடும் தமிழ் வளர்ச்சிக்கு ஆக்கமும், இளம் எழுத்தாளர்களுக்கு ஊக்கமும் தரும் நூல் என்ற எண்ணம் மக்கள் மத்தியிலே பரவவேண்டும். அந்த எண்ணம் மேன்மேலும் பலப்படவேண்டுமென்ற நோக்கத்தில் பயனுள்ள பல இன்சுவை நூல்களை வெளிக்கொண்டுவரத் தாயும், சேயும் முயன்று வருகிறோம். அத்தகைய அரிய முயற்சியில் ஒன்றுதான் உங்களது கரங்களிலே சுடர்விட்டுப் பிரகாசிக்கும் "**அருணோதயம்**" **சமூகத் திரை ஓவியம்**.

அதிகப் பொருட் செலவில் பிரம்மாண்டமான காட்சி ஜோடனைகளை அமைத்து வருடக் கணக்கில் படம் தயாரிப்பதைவிட, குறைந்த அடியில் நல்லதொரு சமூகக் கதையை மக்கள் முன் வைத்தால், அதற்கு பிரமாதமான வரவேற்புண்டு என்பது நிச்சயம். அந்தக் கருத்தினை மனத்திற் கொண்டுதான், அருணோதயம் கதை-வசனத்தை "**பாமினி**" தீட்டியுள்ளார். அதனைப் படித்து, நடித்து, சுவைத்து இன்புறுங்கள்.

***கல்யாணி - வசந்தா***
**பதிப்பாளர்கள்.**

# அருணோதயம்

## 1. உலகம்

[சின்னாளப்பட்டி ஜமீன்தார் வேதாசலத்தின் வீடு - பத்திரிகை படிக்கிறார் வேதாசலம் - நாடகாசிரியர் சிவானந்தம் வருகிறார்.]

**சிவா:** *வணக்கம் ஜமீன்தார்.*

**வேதா:** *சிவானந்தமா! யாரோவென்று பார்த்தேன்.*

**சிவா:** *கண்ணன், என்னைத் தவிர வேறு யார் உங்க எதிரிலே உரக்கப் பேசமுடியும்?*

**வேதா:** *அதிருக்கட்டும். நேற்று வருவதாகச் சொன்ன மனிதர் இப்பொழுதுதான் வருகிறதா?*

**சிவா:** *மன்னிக்கணும். எல்லாம் உங்க பிறந்ததின விழா வுக்குதான் ஏற்பாடு செய்து கொண்டிருந்தேன்.*

**வேதா:** *எனக்குப் பிறந்ததின விழாவா! (சிரித்தல்) விழா வைப் பிரபலமாகக் கொண்டாட அப்படியென்ன மகத்தவங்களாலே சாதிக்க முடியாததை சாதித்து விட்டேன்? அனுவசியமாக ஒன்றும் வேண்டாம். பணத்துக்குத்தான் உலை.*

**சிவா:** *அனுவஸ்யமா? உலகத்திலே பேரும், புகழும் எடுக்க இதப்போல நாலு விழாவைச் செய்து கொண்டா தான் நல்லது. அதை நான் சொன்னா நம்பிக்கை ஏற்படாது. நீங்களே சில பெரிய மனிதரைக் கேட்டுப் பார்த்தால் பிறகு புரியும்.*

**வேதா:** *உம்.*

**சிவா:** *பணத்துக்காகக் கவலை வேண்டாம். சரின்னு சொல் லுங்க. மத்ததை நான் பார்த்துக்கிறேன். அப்படியே எனக்கும் கலைக் களஞ்சியம் என்ற பட்டத்தை.........*

[சமையற்காரன் சின்னையா காபியுடன் வருகிறான்]

**சின்னே:** ஐயாவின் ஆண்டு விழாவிலே உங்களுக்கேன் ஆர்வம்னு இப்போவல்ல விளங்குது.

**வேதா:** வாயை மூடு. (சிவானந்தத்தினிடம்) அவன் கிடக்கிறான். பட்டம், பதவிக்குத் தகுதியில்லாதவர்களெல்லாம் மரியாதை செய்து கொள்ளும்போது உங்களுக்கில்லாமலா? கலைக் களஞ்சியமென்ன; கலையின் உருவென்று பட்டம் கொடுத்துவிடுகிறேன். ஆமாம், இதுவரை எத்தனை கதைகள் எழுதியிருப்பீர்?

**சின்னே:** நான் சொல்றேன் எஜமா. இரண்டு நாடகம்; அஞ்சு கதை. அதிலே மூணு கதைக்கு 'அட்ரசே' இல்லே! நாடகம் நடிக்கும்போது கற்கள் பறந்தன; திரைகள் கிழிந்தன; சீட்டிகள் முழங்கின; குழவிகள் கதறின; பெண்கள் புள்ளி மான்கள்போல் துள்ளினர்.

**சிவா:** (கோபத்துடன்) வருகிறேன் ஜமீன்தார்; வருகிறேன். (வெளியேறுதல்)

**வேதா:** சிவானந்தம், சிவானந்தம்! (அவர் சென்றதும்) ஏண்டா சின்னையா, பெரியவங்க பேசும்போது தலையிடாதேன்னு எத்தனைத் தடவை உனக்குச் சொல்லியிருக்கேன். இவர் ஒருவர்தான் நம்ப ஜமீனைப்பற்றிப் புகழ்ந்துகொண்டிருந்தார். அவரையும் விரோதித்துக் கொண்டால் நம்கதி என்ன ஆவது? இனி இதப்போல செய்தே, ஜாக்கிரதை. போடா, போய் வேலையைக் கவனி. (அவன் செல்ல - தனக்குள்) என் பிறந்த தின விழாவை நடத்தி அதிலே பட்டம் பெற்றுக் கொள்ளப் பார்க்கிறார். 'ஓசி' உலகில் நடமாடும் நல்ல 'எம்டி' மனிதர்!

## 2. பக்காத் திருடன்

[சத்தியபுரம் போலீஸ் ஸ்டேஷன் - இன்ஸ்பெக்டரும், போலீஸ்காரன் ஆறுமுகமும் பேசுகின்றனர்.]

**இன்ஸ்:** என்ன, ஒன்டோண்டி த்ரீ! சிறையிலிருந்து தப்பின திகம்பரத்தைப்பத்தித் தகவல் ஏதாவது கிடைத்ததா?

**ஆறு:** நானும் தேடாத இடம் பாக்கியில்லே. ஓட்டுக்கு அலையறவன் போல வீடுவீடா ஏறி இறங்கினேன். என் இருபது வருஷ சர்வீசிலே, இதக்கண்டு பிடிக்கத்தான் கஷ்டமா யிருக்குதுங்க.

**இன்ஸ்:** எல்லாமே 'சைகிள் டபிள்ஸ்' பிடிப்பதுபோல சுலபமாக முடிந்துவிடுமா?

**ஆறு:** நீங்களே இலாக்காவை குறை கூறினு......

**இன்ஸ்:** குறை கூறவில்லே, ஆறுமுகம். சில்லறை கேசைக் கண்டு பிடித்துவிட்டு, கஷ்டமானதைத் தெரிந்தாலும், தெரியாததுபோல், பணம், பதவி, பட்டத்துக்காக விட்டுவிடக் கூடாது.

**ஆறு:** சார், அந்தத திகம்பரத்தின் அடையாளத்தெ இன்னொரு தடவைச் சொல்லுங்க.

**இன்ஸ்:** முதுகின் வலது புறம் ஒரு வெட்டுக்காயம்; இடது கால் சிறிது ஊனம்.

**ஆறு:** சார், ஒரு ஐடியா! வெட்டுக் காயத்தைக் கண்டு பிடிப்பது கஷ்டம். ஆனு, ஊரிலுள்ள நொண்டிப் பசங்களை அழைச்சு ஏன் ஒரு 'ரவுண்டு' பார்க்கக் கூடாது? தப்பித் தவறி கிடச்சா, இரண்டு பேருக்கும் பதவி உயரும்.

**இன்ஸ்:** உன் யோசனைக்கு யார் இந்த வேலே கொடுத்தது?

**ஆறு:** ஆமாங்க. அநியாயமா இருபது வருஷமா போலீஸ் காரனுவே இருக்கேன். எங்கே கொடுத்தாங்க ஒரு 'புரொமோஷன்!'

**இன்ஸ்:** உன்னே இங்கே வைத்துக்கொண்டிருக்காங்களே அதப்பாரு! (இரட்டைநாடிப்பெண் அபரஞ்சிஎன்பவள் அழுதுகொண்டு வருகிருள்) யாரம்மா? என்ன நடந்தது?

**அபர:** நான் என்னத்தெச் சொல்வேனுங்க?

**இன்ஸ்:** நடந்ததைச் சொல்லுங்க.

**அபர:** குழந்தே பிறக்கலேன்னு, அரசமரத்தை ஆறுமாதம் சுத்தி பெத்த என் குழந்தையைக் காணலேயே!

**இன்ஸ்:** குழந்தையைக் காணவில்லேயா?

**ஆறு:** குழந்தை இல்லே சார். பதினெட்டு வயது பருவ மங்கை.

**அபர:** ஆமாங்க.

**ஆறு:** இந்தக் காலப் பெண்களே இப்படித்தான். வெங்காய சருகு சேலையைக் கட்டிக்கொண்டு வெளியிலே கிளம்பறது. அதைக் காளைங்க கடைக்கண்ணுலே பார்ப்பது; காளையைக் கன்னிங்க காண்பது; இவங்களை கான்ஸ்டபிள் கண்டிப்பதும்தான் சகஜமா போச்சே!

**இன்ஸ்:** ஆறுமுகம், பேசாமலிரு. (புத்தகத்தில் குறித்தல்) பெண்ணின் பெயர்?

**அபர:** காஞ்சனை.

**இன்ஸ்:** எப்பொழுதிலிருந்து காணவில்லை?

**அபர:** இரண்டு நாளாவுதுங்க.

**இன்ஸ்:** உங்க பெயர்?

**அபர:** அபரஞ்சி.

**இன்ஸ்:** விலாசம்?

**அபர:** (ஆறுமுகத்தைக் காட்டி) இவருக்குத் தெரியுங்க.

**ஆறு:** எனக்குத் தெரியும். நான்தான் வீடு பார்த்துக் கொடுத்தேன்.

**அபர:** பார்த்துக்கொடுத்த வீட்டிலே காலைவச்சுதான் இந்தக் கதியாச்சு.

**இன்ஸ்:** ஆறுமுகம், கண்டுபிடிக்கவேண்டிய ஏற்பாடுசெய். நீங்க போகலாம்மா. தெரிந்தவுடன் சொல்லியனுப்புகிறோம்.

**அபர:** (சிறிது தூரம் சென்று திரும்பி) குழந்தே என்னுட்டமா யில்லாமெ தந்த பொம்ம மாதிரியா இருக்கும்.

**ஆறு:** அப்போ, பெண்ணு கிடைக்கலேனு பொம்மை ஒண்ணு வாங்கித் தந்துட்டா போச்சு!

**இன்ஸ்:** ஒன் டொண்டி த்ரீ.

**அபர:** (போய்க்கொண்டே) காஞ்சனு! உன்னை எந்த ஜன்மத்தில் காணப்போகிறேனே!

**ஆறு:** ஏன், இந்த ஜன்மத்திலே கண்டுபிடிக்க மாட்டோம்னு தீர்மானம் செஞ்சுட்டையா?

**இன்ஸ்:** ஆறுமுகம்.

**ஆறு:** எஸ் சார்!

# 3. ஒரேவழி

[ஜமீன்தாரின் வீடு - வேதாசலம், கண்ணன் இருவரும் பேசுகின்றனர்.]

**வேதா:** *கண்ணு! சொன்ன ஏற்பாடெல்லாம் முடிந்து விட்டனவா?*

**கண்:** *ஜமீன்தார் கிளம்ப வேண்டியதுதான் பாக்கி.*

**வேதா:** *எப்படி இன்று என் அலங்காரம்?*

**கண்:** *ஆணுகிய என்னையே தங்கள் அழகு வசீகரிக்கும் போது பெண்களைப் பற்றிச் சொல்லவேண்டுமா? சின்னுளப்பட்டி ஜமீன்தார் வேதாசலம் நாற்பது வயதுக்கு மேலானுலும், விவாகத்திற்கு விளம்பரம் தந்தால் பெண்ணைக் கொடுக்க யார் தயங்குவார்கள்?*

**வேதா:** *போதும் கண்ணு!*

**கண்:** *ஒன்று நினைவுபடுத்த விரும்புகிறேன். காலைமட்டும் அதிகம் ஊனுமல், டாக்டர் சொன்னது போல நடக்க வேண்டும்.*

**வேதா:** *(வருத்தத்துடன்)மாடிப்படியிலிருந்து தவறி விழுந்தவனுக்கு அடிபடுவது இயற்கை; ஆனுல், என்னை நொண்டியாகவே மாறிவிட்டதே!*

**கண்:** *அந்த உண்மை உங்களுக்கும் எனக்கும் தெரியும். தங்களிடம் வேலை பார்க்கும் கயவர்களுக்கு அது தெரிய வேண்டுமே. ஜமீன்தார் அதிக செலவு செய்கிறுர் என்று குறைதான் கூறுவார்கள்.*

**வேதா:** *நன்ருக நாவறண்ட வசை பாடட்டும். நமக்கில்லாத அக்கறையா? லண்டனிலிருந்து பட்டம் பெற்றுத் திரும்பப் போகும் என் தம்பி சுந்தருக்கு வரவேற்பளிக்கலாமா, வேண்டாமா என யோசிக்கும் வேதாசலமா பணத்தை வீண் செலவு செய்கிறவர்? பைத்தியக்காரர்கள்.*

**கண்:** *படிப்பிற்காக மேல் நாடு சென்று திரும்பினுல் அதை ஆடம்பரப் படுத்த வேண்டுமா? அல்லது பந்தலில் தேநீர் அருந்தப் போகிறவர்களுக்குப்*

பணத்தின் அருமை தெரியப் போகிறதா? சச்சரவுகள் ஏற்படாமலிருக்க ஒரேவழி வரவேற்பளிப்பை நிறுத்தி விடுவது நல்லது. ஜமீன்தார் அதற்குச் சம்மதிக்க வேண்டுமே!

**வேதா:** கண்ணு! என்னை நீ ஆபத்திலிருந்து காப்பாற்றி யவன் மட்டுமன்று; சமயத்தில் புத்திமதி கூறும் சாணக் கியன். உன் பேச்சிற்கு என்றுவது நான் மறுப்புத் தெரிவித்ததுண்டா? உன்னிஷ்டம் போல் வரவேற் பளிப்பை நிறுத்தி விடுவோம். நான் வருகிறேன்.

**கண்:** மலர் வாடிவிடப் போகிறது. வண்டு விரைவில் செல்லட்டும்.

**வேதா:** (சிறிது தூரம் சென்று திரும்பி) இவ்வளவு காலம் வாழ்ந்தது பெரிதல்ல கண்ணு! இனி வாழ்வதில் தான் இருக்கிறது. சுந்தர் படித்துப் பட்டம் பெற்றவன். அவனது வருகை இருண்டிருக்கும் ஜமீன் மக்களின் வாழ்வில் அருணோதயமாகி நம்மை வீழ்ச்சி யடையவும் செய்யலாம். பிறகு நம்மிரட்டலுக்கு உதைதான் கிடைக்குமே தவிர, உபயோக மிருக்காது. சாமர்த் தியம், தைரியம், தன்னம்பிக்கை இவற்றை நழுவ விடாமல் நடந்து கொள்ள வேண்டும். சுந்தர் வந்தால், பண்ணைப் பக்கம் போயிருப்பதாகச் சொல்.

**கண்:** மீன் குட்டிக்கு நீந்தவும், பறவைக் குஞ்சுக்குப் பறக் கவும் சொல்லித்தர வேண்டுமா? தைரியமாகப் போங்கள். (வேதாசலம் சிரித்து வெளியேறுதல்)

## 4. ஏழை படும் பாடு

[சின்னுளப்பட்டி ஜமீன் மக்கள் இருவர் தெருவில் பேசுகின்றனர்.]

**ஒரு:** என்னப்பா வேலாயுதம்! லண்டன்லேந்து சின்ன ஜமீன்தார் இன்னிக்கி வருகிருராமே!

**இர:** ஆமாம், அந்த மகராஜன் வந்தாதான் நம்ப கஷ்டத் தைக் கேட்பாரு!

**ஒரு:** வரவேற்பு ஒண்ணும் கொடுக்கலேயாமா?

**இர:** ஜமீன்தார் கொடுக்கலாம்னு நினைச்சாலும் அந்தப் பாவி கண்ணன் கெடுத்திடுவானே! அவன் வச்சது தானே சட்டமாயிருக்குது.

**ஒரு:** உரக்கப் பேசாதே. தெருவிலே நின்னுக்கிட்டிருக் கோம். நம்ப பேச்சை யாராவது கேட்டுக்கிட்டிருந்து ஜமீன்தாருக்கிட்டே கலகம்செய்தா, அப்புறம் ஆபத்து.

**இர:** இந்த அக்கிரமத்துக் கெல்லாம் முடிவு காலம் சின்ன எசமான் வந்ததும் தானு தெரியுது பார்.

**ஒரு:** அவருகிட்டேதான் எல்லாத்தையும் சொல்லணும்.

**இர:** அப்போ நான் வரட்டுமா?

**ஒரு:** செய்.

## 5. இது நிஜமா?

[ஜமீன்தாரின் வீடு - வேதாசலத்தின் தம்பி சுந்தர் லண்டனிலிருந்து திரும்புதல் - சின்னையா வரவேற்றல்]

**சின்னை:** வாங்க, வாங்க எசமா! ஆளு மாறி வருவீங்கனு நினைச்சா போனு போலேயே இருக்கீங்களே! கொண் டாங்க கோட்டே.

**சுந்:** (சிரித்து) மேல் நாட்டில் நாலு வருஷம் தங்கிவிட்டா பத்தடி உயர்ந்துடுவேனு ..இல்லே பன்ரொட்டி போல உப்பிடுவேனு?

**சின்னை:** பெரிய பட்டம் வாங்கினப்புரம் வேடிக்கையா பேசினு மதிப்பு குறைவுன்னு நினைச்சுகிட்டிருக்கிற வங்களுக்கு மாருக இருக்கீங்களே! எஜமா, எனக்கு ஒரு சந்தோஷம். நீங்க உயராவிட்டாலும், குள்ள மாகாம வந்தது போதும்!

[இருவரும் சிரித்தல் - கண்ணன் வருகிருன்.]

**கண்:** ஹலோ சுந்தா! ஸ்டேஷனிற்கு கார் கரெக்டாக வந்ததா?

**சுந்:** டென் மினிட்ஸ் லேட்.

**கண்:** ஐ ஆம் சாரி. ஜமீன்தாருக்குக்கூட கார் தேவைப் பட்டதால், லேட்டாகிவிட்டது. (சின்னையாவை) பெட்டி, படுக்கை யெல்லாம் எடுத்துவை.

**சின்னை:** நான் சமையல்காரனே தவிர எனக்கு வெளி வேலை கிடையாது.

**சுந்:** சின்னையா, எடுத்துவை.

**சின்னை:** நீங்க சொல்லுங்க எசமா, எது வேணுமானாலும் செய்யறேன். சூடா காபி கொண்டு வரட்டுங்களா?

**சுந்:** சொல்லியதைச் செய். (சின்னையா சென்றதும்) அண்ணா எங்கே?

**கண்:** அவருக்கு ஏது ஓய்வு? இந்த ஜமீன் பாரம் அந்த சுகத்தைத் தந்தால் தானே.

**சுந்:** நான் வரப்போவதாகத் தெரிந்தும் வீட்டிலே தங்காமல் என்ன வேலை? தம்பியினிடத்தில் என்ன அன்பு!

**கண்:** (சிரித்து) நீ ஒரு தம்பி மட்டும் அவருக்கு இல்லை சுந்தர்; உன்போன்ற தம்பி பலர். படிப்பிற்காக மேல் நாடு செல்லாவிட்டாலும் அவர்கள் ஒவ்வொருவரும் பட்டதாரியாக வேண்டுமென்று இரவு பகல் எனப் பாராது உழைக்கும் உத்தமர் உன் அண்ணா! தன் எண்ணம் போல் மக்களின் கண்ணீரைத் துடைக்கப் போதிய பணம் அவரிட மில்லா விட்டாலும் அதற்கு இடையூறாக இருக்கும் தடைகளைத் தூள் தூளாக்க வேண்டியது தன் கடமை யெனக் கருதும் கண்ணிய புருஷர். அவருக்கா உன்னிடம் அன்பு, பாசம், பெருமை இல்லை? என்றால் நம்ப முடியவில்லை சுந்தர்; நம்ப முடியவில்லை. ஆனால், ஒன்று. அவருடைய கஷ்டத்தை அறிந்திருந்தால் இவ்வளவு கொடூரமாகப் பேசி இருக்கமாட்டாய். நீ லண்டனிலிருக்கும் சமயம் ஒருநாள் மாடியிலிருந்து இறங்கும்போது தடுக்கி விழுந்து விட்டார். அன்றிலிருந்து இடது காலை ஊன்றியே நடக்க வேண்டியிருக்கிறது. உடலில் எத்தகைய அங்க ஈனம் ஏற்பட்டாலும் அதனைப் பொருட்படுத்தாது உயிருள்ள வரையும் நாட்டின் சேவையே தன் தேவை எனப் பாடுபடும் அவரையும், ஒரு சிலர்

பகைக்கவும், பழிக்கவும்தான் செய்கின்றனர். ஜமீன் தார் வேதாசலம் சுயநலப் பேர்வழி. ஜமீன் பொதுப் பணத்தில் தம்பியைப் படிப்பிற்காக மேல் நாடு சென்று வரச் செய்து வீடு திரும்பியதும் வரவேற்பளிக்க கஜானாவைக் காலி செய்யக் காத்துக்கொண்டிருக்கிறார் எனத் தூற்றுகின்றனர். போற்றுபவர் போற்றட்டும் தன்னை; புழுதி வாரித் தூற்றுபவர் தூற்றட்டும். ஆனால், தன் ஆசைத் தம்பி ஒருவர் பழிச் சொல்லுக் கும் ஆளாகக் கூடாது என்றுதான் உனக்குத் தர வேண்டு மென்றிருந்த வரவேற்பளிப்பையும் நிறுத்தி விட்டார் என்பது தெரியுமா?

**சுந்:** ஏன் இதை யெல்லாம் ஒரு கடிதத்தில்கூட எழுத வில்லை?

**கண்:** உன் மனம் புண்படுமென்று தான் தெரிவிக்க வில்லை.

**சுந்:** ஆத்திரத்தில் அறிவீனமாக அண்ணாவின் அருமை தெரியாமல் பேசி விட்டேன்.

**கண்:** சுந்தர், ஒரு நற்செய்தி. உனக்கு மணம் முடிக்க பெண் பார்த்திருக்கிறோம். இதையாவது எழுதியிருக் கலாமே என்று எண்ணுவாய். ஏன் எழுதவில்லை தெரியுமா?

**சின்னை:** (கையில் பால் குவளையுடன்) புளித்துப்போய் விடாதுங்களா?

**கண்:** என்ன அர்த்த மில்லாமல் பேசுகிறாய்?

**சின்னை:** நான் பாலைச் சொல்லிக் கொண்டு வந்தேன்.

**சுந்:** எப்போதும் உங்களுக்கு இப்படித்தான் சச்சரவா?

**கண்:** இன்றுதான் கிறுக்குப் பிடித்திருக்கிறது.

**சின்னை:** நீங்களே அதை ஒத்துக் கிட்டீங்களா?

**சுந்:** சின்னையா.

**சின்னை:** வந்ததைச் சொல்ல மறந்துட்டனே!.. எசமா, சாப் பாடு தயார். இலை, பத்தணு!

**சுந்:** என்ன ஓட்டல் சர்வர் மாதிரி பேசுரே.

**சின்னை:** இங்கே வரதுக்கு முன்னே அங்கேதானே இருந் தேன். கொஞ்சம் பழைய வாடை! (சிரிக்கின்றனர்)

# 6. திகம்பர சாமியார்

[தெருவில் இடது காலை ஊன்றி நடக்கும் சாமியார் ஒருவனைப் போலீஸ்காரன் ஆறுமுகம் சந்தித்து அவனை கைதி திகம்பரம் என்று சந்தேகித்தல்.]

**ஆறு:** *நில்லு.*

**திகம்:** *என்னங்க?*

**ஆறு:** *உன் பேரு என்ன?*

**திகம்:** *திகம்பரம்.*

**ஆறு:** *திகம்பரமா! நீ ஜெயிலுக்குப் போயிருக்கியா?*

**திகம்:** *இரண்டு தடவே போயிருக்கேன்.*

**ஆறு:** *இரண்டு தடவே போயிருக்கியா! (தனக்குள்) முதுகிலே இருக்கிற வெட்டுக் காயத்தை எப்படிக் கண்டு பிடிக்கிறது? உம்.*

**திகம்:** *என்ன சொல்றீங்க?*

**ஆறு:** *கிழிஞ்ச சொக்கா போட்டிருக்கியே ஒரு 'சர்ட்டு' வாங்கித் தரலாமான்னு யோசிக்கிறேன். புண்ணியம் சேருமில்லே!*

**திகம்:** *வாங்கித் தாங்க! குளிர் காலத்திலே கஷ்டமா இருக்குது.*

**ஆறு:** *(துணிக் கடையில்) இது என்ன விலை?*

**க. ஆள்:** *அஞ்சு ரூபாய்.*

**ஆறு:** *சரி. கொடு.*

**திகம்:** *இந்தக் கலர் நல்லா யில்லீங்க; அந்தச் சிலாக்கு சர்ட்டை வாங்குங்க.*

**ஆறு:** *பரவாயில்லே. இந்தக் கைத்தறி சொக்காயே போட்டுக்கோ. இந்தாப்பா பணம்.*

**திகம்:** *என்னைப் போலவங்ககிட்டே போலீஸ்காரங்க அன்பா பழகிறதே இப்போதான் பார்க்கறேன். உங்களுக்கு ரொம்ப நன்றியுங்க.*

**ஆறு:** *முதுகை என் பக்கமாத் திருப்பிகிட்டு சொக்காயைப் போடு.*

**திகம்:** உங்க குழந்தே நல்லா வாழணும்.

**ஆறு:** அரை டஜன் அது நல்லாதான் வாழுது. (தனக்குள்) வெட்டுக்காயம் ஒண்ணுத்தையும் காணுமே. ஆமா, நீ எதுக்காக ஜெயிலுக்குப் போனே?

**திகம்:** சினிமா கொட்டகையிலே 'சிகரெட்' குடிச்சேன். நான் வர்றேனுங்க. (போகிருன்)

**ஆறு:** அட, பாவி! என் இருபது வருஷ சர்வீசிலே அஞ்சு ரூபாயுக்கு வேட்டு வச்சுட்டானே. சரி பாக்கலாம்.

## 7. நான் சொல்லும் ரகசியம்

[ஜமீன்தாரின் வீடு - தனித்திருக்கும் சுந்தரிடம் சின்னையா வருகிருன்.]

**சின்னே:** எசமா! உங்ககிட்டே ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும். நான் சொன்னதாக ஒருத்தர் கிட்டேயும் சொல்லக் கூடாது.

**சுந்:** என்ன?

**சின்னே:** (வருத்தத்துடன்) நான் இந்த வீட்டிலே வந்து பத்து வருஷமாவப்போவுது. இத்தனை வருஷமா இருந்தது போலப் பெரிய எசமா நாலு வருஷமா இல்லீங்க. வட்டிப் பணத்தை வசூலித்துக் கொண்டு வர ஒரு நாள் கண்ணனேடு வெளியே போனரு. அன்னையலிருந்து அவர் போக்கே மாறிப்போச்சு. எதுக்கெடுத்தாலும் கோவப்படுருரு. வீட்டிலே தங்குவதே கிடையாது. ஜமீன் மக்களுக்கு அவரைக் கண்டாலே பிடிக்கலே. நீங்க வந்ததும் உங்களேயே ஜமீன்தாராக்கிடணும்னு நினைச்சுகிட்டிருக்காங்க. பெரிய எசமா கெட்டதுக்கெல்லாம் காரணம் இந்தக் கண்ணன்தான். அவன் பேச்சுக்கு மறுப்புச் சொல்லாமெ, அவன் ஆட்டிவைக்கும் கைபொம்மையாகி விட்டாரு. இதையெல்லாம் பார்க்க கஷ்டமா இருக்குதுங்க!

**சுந்:** அண்ணு இன்னும் வரவில்லையா?

**சின்னை:** பண்ணையிலே மலைவீடு இருக்கும் போது இங்கே ஏன் வரப்போருரு?

**சுந்:** சரி. நான் வருகிறேன்.

**சின்னை:** என்னைக் காட்டிக் கொடுத்துவிடாதிங்க.

**சுந்:** பயப்படாதே சின்னையா.

## 8. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு

[மலைவீடு - காஞ்சனுவின் நாட்டியம் முடிந்ததும் ஜமீன்தார் வேதாசலம் பேசுதல்.]

**வேதா:** நாட்டியம் என்னை இந்திர லோகத்திற்கே அழைத்துச் சென்றுவிட்டது. காஞ்சனு! உன் அழகு, பேச்சு, கலைக்கு ஈடு எது கொடுத்தாலும் இணையாகாது. உன் கரங்களைப் பற்றுவதற்கே ஆயிரம் பொன் பரிசு அளிக்கலாம். முத்துப் பற்கள் தெரிய நீ சிரிக்க வேண்டுமானல், முத்தாபரணத்தால் உன்னை முழுவதும் அலங்கரிக்கலாம்.

**காஞ்:** கவிஞராகி விட்டீர்களே! கேவலம் ஏழைப் பெண் என்னையா இவ்வளவு வர்ணிப்பது?

**வேதா:** என்னைத் தவருக எண்ணிவிட்டாய் காஞ்சனு. உன்னை என் இதய ராணியாகவே எண்ணியுள்ளேன்.

**காஞ்:** அப்போ நான் பாக்கியசாலி.

**வேதா:** நீ மட்டுமில்லை. உன்னை அடைந்த நானும் பாக்கியசாலிதான். காஞ்சனு.

**காஞ்:** வேண்டாம். யாரோ வருகிருர்.

**வேதா:** ஜமீன்தார் வேதாசலம் இருக்கும் போது நீ ஏன் பயப்படவேண்டும்? போகாதே, காஞ்சனு! நில், காஞ்சனு!

**காஞ்:** இல்லை. என்னை மன்னித்து விடுங்கள்.

[காஞ்சனு செல்ல - எதிரில் சுந்தர் வருதல்.]

**வேதா:** யார் நீ?

**சுந்:** காம வெறியில் உடன் பிறந்த தம்பியும் மாற்ருனுகக் காணப்படுகிருனு?

**வேதா:** (இனிய குரலில்) சுந்தர்! எப்போ, வந்தாய்?

**சுந்:** போதும் உன் உபசாரம். பணம், பதவி, பலத்திற்கு அஞ்சி உன்னை நேசிக்கும் பெண்களின் இரத்தத்தை குடிக்கும் நயவஞ்சகா! நீயும் ஒரு மனிதனா? பெண்ணைப் பெற்றவர்களின் கண்ணீர் நிலத்தில் சிந்தினால் நீ சுகமடைவாயா? ஏன், பயந்து பின் வாங்குகிறாய்?

**வேதா:** அண்ணனென்று மரியாதையில்லாமல் பேசும் நீ மட்டும் உத்தமனா?

**சுந்:** அண்ணன்! அந்த அருஞ் சொல்லின் பொருள் அறியாத உன்னை, அண்ணாவென்று அழைக்க என் நா கூசுகிறது.

**வேதா:** ஏன் கூசாது? தாய் தந்தை அற்ற உன்னை அன்போடு சீராட்டி, பாராட்டி வளர்த்தேன் பார்; அதற்கு இதுமட்டும்மா பேசுவாய்? தம்பி பட்டம் பெற்றுப் பெரிய பதவி வகிக்க வேண்டுமென்று மேல் நாடு சென்று வர உன்னைக் கருணையுடன் அனுப்பியதற்கு இதுதான் நீ எனக்களிக்கும் சன்மானமா? இவ்வளவு கீழ் தரமாக நடந்து கொள்வாய் என்று நான் கருதவில்லை.

**சுந்:** நான் பேசியதற்கெல்லாம் மண்டியிட்டு உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். ஆனாலும், ஒன்று சொல்ல ஆசைப்படுகிறேன். மனம் போனபடியெல்லாம் நாட்டை ஆண்ட மன்னர் பரம்பரையினரே சரித்திரத்தில் ஏராளம். கொடுமையைக் குறிக்கோளாகக் கொண்ட மன்னர்களும், கொலைத் தொழிலையே போர் நெறியாகக் கொண்ட காவலர்களும், சர்வாதிகாரத்தையே நம்பி வாழ்ந்த அரசர்களும், மக்களின் செல்வத்தையும், உள்ளத்தையும் சிறையிட்ட பயங்கரவாதிகளும் சரித்திர புத்தகத்தின் ஏடுகளை வெகு நாட்கள் வரை நிரப்பிக் கொண்டிருந்தனர். கால வேகத்தில் அத்தகைய மன்ன்ர்களின் சர்வாதிகாரம் சாய்ந்து, மணிமுடி வீழ்ந்து மண்ணோடு மண்ணாய்ப் புதைந்து விட்டனர். அதற்குக் காரணமென்ன? எங்கே உரிமை சூறையாடப்படுகிறதோ, உழைப்புக் கொள்ளையடிக்கப்படுகிறதோ, உணர்வு சிதைக்கப் படு

*கிறதோ, உயர்நிலை வீழ்த்தப் படுகிறதோ, அங்கெல்லாம் மக்கள் புரட்சி செய்து ஜனநாயகத்தையும், தங்களது உரிமையையும் நிலை நாட்டியிருக்கின்றனர் என்பதை மட்டும் மறந்துவிடாதீர்கள்.*

**வேதா:** *சரித்திர புத்தகத்தைப் புரட்டிப் பார்க்க நேரமுமில்லை; உன் உபதேசம் எனக்குத் தேவையுமில்லை. இன்று முதல் என் சொந்த விஷயங்களில் தலையிடாமலிருந்தால் வீட்டிலிரு; இல்லா விட்டால் .........*

**சுந்:** *வெளியேறிவிடு! அவ்வளவுதானே. படித்தும் பண்பட்ட உள்ள மில்லாதவன் எதுவும் படிக்காத பாமரனுக்குச் சமம். இப்போதே வெளியேறுகிறேன். சொத்தைப் பிரித்துவிடு.*

**வேதா:** *(சிரித்து) சொத்து! யாருடைய பணத்தில் பங்கு பிரிப்பது? தந்தையினால் விட்டுச் செல்லப்பட்ட சொத்தில் பாதி உன் படிப்பிற்காகவே செலவழிந்துவிட்டது. என் பங்கில் சம்பாதித்த பணம் தான் இப்போதிருப்பது. இனி காலணாகூட உனக்குக் கொடுக்கவேண்டியதில்லை என்பது நினைவிருக்கட்டும்.*

**சுந்:** *பணத்துக்கு ஆசை வைத்து உன் அற்பச் செயலுக்குக் காவடி தூக்குவேனென்ற கனவு காண வேண்டாம். கற்றவனுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு. இதோ போகிறேன்; போய்க்கொண்டே இருக்கிறேன். உன் அக்கிரமச் செயல்களுக்கு ஒரு நாள் கண் கலங்குவாய் என்பதை மட்டும் மறந்துவிடாதே. (வெளியேறுகிறான்)*

**வேதா:** *(தனக்குள்) போடா, போ! கற்றவனுக்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பாம். செந்தமிழிலே பேசுகிறான். இது படிக்காதவனுடைய அதிருஷ்ட உலகமடா!*

## 9. காஞ்சனா

**[காஞ்சனாவும் அவள் தாய் அபரஞ்சியும் அவர்கள் வீட்டில் பேசுகின்றனர்.]**

**காஞ்:** *அம்மா!*

**அபர:** *காஞ்சனா! எங்கே கண்ணு போயிருந்தே? உன்னை எந்த இடத்திலேயெல்லாம் தேடுவது?*

**காஞ்:** (வருத்ததுடன்) நான் எங்கேயும் போகலேயம்மா. அன்னிக்கு நம்ப வயலியிருந்து வரும்போது ஜமீன் தாரின் கையாள் கண்ணன் என்னை வழிமறித்து, ஜமீன்தார் என்மேலே ஆசைப் படுகிருர்; அவருக்கு நான் இணங்கிஞல் நிறைய பணம் தருவார்; இல்லா விட்டால் நம்ப வீட்டிற்கே ஆபத்து நேரிடும்னு பய முறுத்திஞன். நான் கத்தினேன். என் வாயை யடைத்துப் பலாத்காரமாக ஜமீன்தார்கிட்டே இழுத்துக் கொண்டு போஞன். தப்புவதற்கு வேறு வழியில்லா மல், ஜமீன்தாரை நேசிப்பதுபோல நடிச்சு, அவனை ஏமாற்றிவிட்டு தப்பி வந்து விட்டேன்.

**அபர:** அப்படியா! உன்னைக் காணலே யேன்னு போலீ சிலேகூட தெரிவிச்சேன்.

**காஞ்:** ஏம்மா, அப்படிச் செய்தே? இந்த விஷயம் ஊரி லுள்ளவங்களுக்குத் தெரிஞ்சா நமக்குத்தானே மதிப் புக் குறைவு.

**அபர:** தெரிஞ்சா, தெரிஞ்சுட்டுப் போவுது. இனிமே நீ எங்கேயும் தனியாக வெளியிலே போகாதே.

**காஞ்:** சரி, அம்மா.

## 10. மனிதனும் மிருகமும்

[ஜமீன்தாரின் வீடு - மலைவீட்டிலிருந்து திரும்பும் வேதாசலத்தினிடம், கண்ணன் பேசுதல்.]

**கண்:** ஏன் முகவாட்டம்?

**வேதா:** பறந்துபோய் விட்டாள் பஞ்சவர்ணக் கிளி!

**கண்:** காரணம்?

**வேதா:** உன்னை நம்பியதால்.

**கண்:** என்ன நடந்தது?

**வேதா:** சிவ பூஜையில் கரடி புகுந்தாப் போல் சுந்தர் அங்கு வந்து சேர்ந்தான்.

**கண்:** இதற்குக் காரணம் சின்னையாதான். அவன்தான் நம்மைப் பற்றிச் சுந்தரிடம் சொல்லியிருக்கவேண்டும்.

**வேதா:** சின்னையா.

**சின்னை:** என்னங்க?

**கண்:** இன்றிலிருந்து உன் சீட்டைக் கிழித்தாகிவிட்டது.

**சின்னை:** விடுதலையா!

**வேதா:** இந்தா, சேரவேண்டிய பணம்.

**சின்னை:** மனுசனுக்குக் கோபம் வந்தாதான் நல்லது.

**கண்:** போடா, அயோக்கியப் பயலே.

**சின்னை:** அப்போ, நான் போகவேண்டியதில்லே.

**வேதா:** என்ன உளறுகிறாய்?

**சின்னை:** அயோக்கியங்க இருக்கிற இடம், இதுதானே.

**வேதா:** என் சோற்றையே தின்றுவிட்டு என்ன திமிர்?

**சின்னை:** கையை மேலே வைக்கவேண்டாம். நானே போறேன். குட்டைய் அடுப்பு; டாட்டா கரண்டி; சீரியோ விசிறி! (போகிறான்)

**கண்:** தொலைந்தான் பீடை.

**வேதா:** பீடை மட்டும் தொலையவில்லை கண்ணு; சனியனும் ஒழிந்து விட்டான். சுந்தரும், இனி வீடு திரும்பமாட்டான்.

**கண்:** என்ன?

**வேதா:** மனிதன் பட்டம் பெற்றுவிட்டால் மட்டும் போதாது; பகுத்தறிவு வேண்டும். மலைவீட்டில் நடந்ததைச் சுருக்கமாகச் சொல்கிறேன் கேள். காஞ்சனுவும் நானும் மோகத்தில் ஆழ்ந்திருந்தோம். அங்கு வந்த சுந்தரைக் கண்டு சுந்தரி நழுவினாள். படமெடுத்த பாம்பு கீரியைக் கண்டு வந்த வழியே நழுவியது. புரிந்ததா புனைப் பேச்சு?

**கண்:** புனைப் பேச்சு - புனை பெயர் உங்களுக்காகவே பிறந்தது; அதனால் நீங்கள் வாழ்வதும் நான் கண்ட உண்மை ஆயிற்றே!

**வேதா:** இனி நடக்கவேண்டியதைக் கவனி.

**கண்:** காஞ்சனா போனால் போகட்டுமே. அவள்தான் இந்த உலகில் கட்டழகியா? சத்திய புரத்திலிருக்கும்

பெண் ஒருத்தியைப் பார்த்தால் பார்த்துக்கொண்டே இருக்கலாம். பசி, தாகம், தூக்கம் என்ற நினைவே உங்களுக்கு இருக்காது!

**வேதா:** யார் அவள்?

**கண்:** அவள் ஓர் அழகரசி. பெண்ணுக்குப் பெண்ணே காதல் கொள்ளத்தக்க கட்டழகி. கயல் விழிகள்; அதிலே காந்தப் பார்வை. மாந்தளிர் மேனி. முல்லைக் கொடி போன்ற இடை. முழுமதித் தோற்றமும் படைத்த காவியத் தலைவி! அவள் நடந்தால் அன்னமும், கொஞ்சினால் கிளியும், பாடினால் குயிலும், ஆடினால் மயிலும் தோற்றுப் பின் வாங்கும்.

**வேதா:** அந்த வண்ண மலரை இன்றே பறித்து வர முடியுமா, கண்ணு?

**கண்:** ரோஜாவை ஜாக்கிரதையுடன் பறிக்க வேண்டும். சிறிது அவகாசம் தேவை. இது என் பொறுப்பு.

**வேதா:** செலவுக்கு வேண்டிய பணத்தை எடுத்துக்கொள்.

**கண்:** செலவுக்கு வேண்டிய பணம்! என் சொந்தப் பணத்தில் எடுத்துக் கொள்வதா? இல்லை, கடன் வாங்கி.....

**வேதா:** கடன் ஏன் வாங்கவேண்டும்? வரிப் பணத்தை வசூலித்துக் கொண்டுவா. யாராவது கொடுக்க மறுத்தால் ஜமீன்தார் மனிதராக இருக்கமாட்டார் என்று சொல்.

**கண்:** இப்போதுமட்டுமென்ன, மனிதராகவா மதிக்கப் படுகிறீர்கள்? "ஜமீன்தார் ஒரு மனிதரா? மிருகத்திற்குக்கூடச் சற்று ஈவு இரக்கமிருக்கும். காலமில்லாப் பருவங்களில் காசைக் கேட்கிறார். கண் கலங்கக் கருத்தோடு கஷ்டத்தைச் சொன்னால், கரையாத உள்ளம் படைத்த கல் நெஞ்சராகி விடுகிறார்" என்றுதானே ஊரெங்கும் பேச்சு! சண்டி முனியன்கூட இனி நம் பக்கம் பேசமாட்டான் போலிருக்கிறது. இந்தச் சமயத்தில் வரியைக் கேட்கப் போனால் முதுகுதான் விரியுமே அன்றி, வரி சிறிதும் பெயராது.

**வேதா:** கண்ணு! இந்த பங்களாவை விற்றுவிடலாமே! மலைவீடு ஒன்று போதாதா? அங்கேயே குடியும் குள்ளநரித்தனமுமாக வாழலாம்.

**கண்:** உங்களிஷ்டம்.

# 11. மணமகன்

[சத்தியபுரம் ரயில்வே ஸ்டேஷன் - டிக்கெட் வாங்காமல் வரும் சுந்தர் ரயிலிலிருந்து இறங்கித் தண்டவாளத்தின் வழியாக வருதல் - போலீஸ்காரன் ஆறுமுகம் சந்திக்கிறான்.]

**ஆறு:** *இப்பொதான் ரயிலிலிருந்து வர்றீங்களா?*

**சுந்:** *(அசடு வழிய)* இல்லே...'வாக்' செய்ய வந்தேன்.

**ஆறு:** *உண்மையைச் சொல்லு. 'வாக்' செய்ய வந்தையா; இல்லே, டிக்கெட் வாங்காமெ வந்தையா?*

**சுந்:** *உங்க மேலே ஆணையா, சும்மா வாக் செய்யத்தான் வந்தேனுங்க.*

**ஆறு:** *'டிக்கெட் லெஸ் டிராவெல்லுன்னு' தான் உன் முகம் காட்டுதே! உன்னைப்போலவங்க டிக்கெட் வாங்காமெ போரதோடு, தண்டவாளத்தை வேறு கழட்டிட்டு வேடிக்கைப் பார்க்கறது. எங்களைப் பார்த்தா, போராட்டம், நாட்டுக்குச் செய்யற சேவைன்னு அடுக்கு மொழியிலே அள்ளி வீசறது. ஏன், நின்னுகிட்டிருக்கே? நட ஸ்டேஷனுக்கு.*

**சுந்:** *போலீஸ் ஸ்டேஷனிற்கா?*

**ஆறு:** *இல்லே, ரயில்வே ஸ்டேஷனுக்கு!*

**சுந்:** *(யோசித்து)* நான் இந்த ஸ்டேஷன் மாஸ்டரின் மருமகப் பிள்ளையுங்க!

**ஆறு:** *என்ன, மிஸ்டர முத்துவின் மருமகப் பிள்ளையா! இதை அப்பவே சொல்லக்கூடாதா?*

**சுந்:** *ஆமாம். அவருடைய மருமகப் பிள்ளையேதான்!*

**ஆறு:** *என்னிடமா உன் வேலையைக் காட்டுரே? ஐயா போலீசிலே இருபது வருஷம் சர்வீசு. நட, ஸ்டேஷனுக்கு.*

**சுந்:** *எதற்கு?*

**ஆறு:** *எதற்கா? இந்த ஸ்டேஷன் மாஸ்டர் பேரு முத்துமில்லே, கிளிஞ்சலுமில்லே! திருமலை.*

**சுந்:** இதற்குத்தானு! அவரை நாங்க வீட்டிலே முத்துன்னு தான் அழைக்கிறது.

**ஆறு:** வீட்டிலே முத்துன்னுதான் அழைக்கிறதா? சரி. ஸ்டேஷன் மாஸ்டர்கிட்டே போகலாம்.

**சுந்:** 'அர்ஜெண்டா' ஓர் இடத்திற்குப் போகணும்.

**ஆறு:** இது ஒண்ணும் 'ஆர்டினரி' விஷயமில்லே!

**சுந்:** அவருக்கு இன்னிக்கு 'நைட் டியூட்டிங்க.'

**ஆறு:** நைட் டியூட்டியா! அப்போ, அதோ தெரியுது பார். அவர் வீடு! அங்கே போகலாம், வா.

**சுந்:** என்னங்க?

**ஆறு:** நடங்க.

## 12. தேடிவந்த செல்வம்

[ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் திருமலேயின் வீடு- அவர் மகள் உஷா தோட்டத்தில் பாடி முடிந்ததும், அவர்களின் வீட்டில் வாழ்ந்து வரும் கற்பகம் வரு கிருள் ]

**கற்ப:** என்ன உஷா என்று மில்லாத குதூகலம்? நேற் றிரவு கனவில் யாராவது வந்தாரா?

**உஷா:** போதும் அத்தே கேலி பேச்சு.

**கற்ப:** வெளியிலே போறேன். அப்பாகூட இல்லே. வீட்டைக் கவனித்துக் கொள்.

[கற்பகம் சென்றதும் - சுந்தரும், ஆறுமுகமும் வருதல்.]

**ஆறு:** அம்மா, அம்மா! இவரு யாரம்மா?

**உஷா:** ஓ, போலீஸ்காரரு! ஏங்க, உங்களுக்குப் பெயர் வைத்துக் கூப்பிடத் தெரியாதா? அம்மாவாம், அம்மா. அதுக்குள்ளாகவா, நான் அம்மாவாகிவிட்டேன்?

**ஆறு:** அப்பா பேர் தெரியுமே தவிர, உன் பேரு தெரி யாதேயம்மா...இல்லே...இல்லே... பொண்ணு.

**சுந்:** (உஷாவை அறிந்தவன் போல) இதோ பார் கமலம். தண்டவாளத்தின் பக்கமா நான் போய்க்கொண்டிருந் தேன். நான் டிக்கெட் வாங்காமல் வந்தவன்; தண்டவா ளத்தைக் கழட்டுகிற காலிப் பசங்கன்னு நினைச்சு என்னை ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டரிடம் கூப்பிட் டாரு. நான் உங்கவீட்டு மருமகப் பிள்ளை; சும்மா 'வாக்' செய்ய வந்தேன்னு சொல்லியும் அதை நம் பாமெ,உண்மையை தெரிஞ்சுக்க,இங்கே அழைத்துக் கொண்டு வந்திருக்காரு. நீயே சொல்லு. நான் யார்?

**உஷா:** (சுந்தரின் செய்கையை அறிந்து) ஆமாம். இவரை உங்களுக்குத் தெரியாதா? இவரு...இவரு...வந்து...

**சுந்:** அத்தை பிள்ளை சுந்தர்.

**உஷா:** அத்தை பிள்ளை சுந்தர்! என் சொந்த அத்தான். நேற்றுதான் ஊரிலிருந்து வந்தாரு.

**ஆறு:** நீங்க இரண்டு பேரும் சேர்ந்து என்னைப் பைத்திய மாக்க முடியாது. இந்த ஆறுமுகம், போலீசிலே இரு பது வருஷம் சர்வீசு.

**சுந்:** அப்படியெல்லாம் இல்லீங்க.

**ஆறு:** ஏய், முதல்லே நீ இவங்க வீட்டு மருமகப் பிள் ளேன்னு சொன்னே; இப்போ, அது அத்தை பிள் ளையா மாறிப்போச்சா?

**சுந்:** இனிமேதான் அந்த உறவு!

**ஆறு:** அப்படியா? அப்போ நான் வர்ரேன். (போகிறுன்)

**சுந்:** கமலம், மிக்க நன்றி. (தயங்குகிறுன்)

**உஷா:** விடுதலைதான் வாங்கிக் கொடுத்தாகிவிட்டதே. அப்பா வருகிற நேர மாகிறது. போய் விடுங்கள்.

**சுந்:** என்னை விடுவித்தது பெரிய உதவியாகவே இருந் தாலும், உனக்குப் பிரதி உபகாரம் செய்யாமலா இருக்கப் போகிறேன்?

**உஷா:** எனக்கு ஒரு தீங்கும் நேராது. அப்படி நேர்ந்தா நீங்க வந்து ஒண்ணும் கைகொடுக்க வேண்டாம். ஐயா சுந்தரரே! நீங்க வந்த வழியே போகலாம்.

**சுந்:** இல்லைக் கமலம். உன் அழகுக்கும், குறும்புப் பேச்சுக்கும் எல்லையில்லா இடையூறுகள் ஏற்படலாம். உன்னைப் பாதுகாத்துக்கொள்ளக் கட்டாயம் ஒரு காவலாள் தேவை. அந்த அரும் பணியை அளித்தால் ஏற்கச் சித்தமாய் இருக்கிறன் இந்த நாடோடி மன்னன்!

**உஷா:** ஆள் 'பேண்ட்' போட்டிருக்காரேன்னு மரியாதையா பேசிறு ஒண்ணும் நடக்காது போலிருக்கு. உன்னைத் தப்ப வைத்தது என் குற்றம்; நீ என்ன செய்வே?

**சுந்:** கமலம்! பசிக்கிறது.

**உஷா:** கண்டவங்களுக்கும் சோறு போட இது ஒண்ணும் அன்னதான சத்திரமில்லே. போய்த் தொலையா.

**சுந்:** ஐயோ, அம்மா!

**உஷா:** ஐயையோ, மயக்கமாக விழுந்து விட்டாரே!

[சுந்தருக்கு முகத்தில் தண்ணீர் தெளித்து உதவிசெய்ய-இருவரும் நட்புக் கொள்கின்றனர்.]

**சுந்:** குளிப்பாட்டியாகி விட்டது. சாதம் ஊட்டேன். (உஷா சிரித்தல்)

**உஷா:** (துணி ஒன்றை எடுப்பதைப் பார்த்து) மற்றவர் வீட்டுத் துணியைக் கேட்காமல் எடுக்கலாமா?

**சுந்:** பேசாதே. நான் இந்த வீட்டு மருமகப் பிள்ளை!

**உஷா:** அப்படியா!

[சுந்தர் தன் சர்ட்டில் தண்ணீர் பட்டதின் காரணமாகச் சர்ட்டை நீக்க, அதை உஷா வீட்டினுள்ளே எடுத்துச் செல்லல்.]

## 13. என் தங்கை

[ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் திருமலையை வழியில் ஆறுமுகம் சந்தித்தல்.]

**ஆறு:** நமஸ்காரம்.

**திரும:** சௌக்கியமா?

**ஆறு:** அதிருஷ்டமில்லாமப் போன வாழ்க்கையிலே சுகமேதுங்க?

**திரும:** என்ன ஆறுமுகம், ஒரு மாதிரியாப் பேசுரே?

**ஆறு:** இன்னிக்குப் பாருங்க ஒரு கேஸ் கண்டு பிடிச்சேன். சுத்தப் பச்சைக் கட்டையா போயிடுச்சு!

**திரும:** என்ன நடந்தது?

**ஆறு:** தண்டவாளத்தின் பக்கமா ஒருவன் வந்துகிட்டிருந்தான். ஆளைப் பார்த்தா டிக்கெட் வாங்காமெ வந்தவன் மாதிரி இருந்தது.

**திரும:** டிக்கெட் வாங்காமல் வந்தானு?

**ஆறு:** விஷயத்தைக் கேளுங்க. கடைசியிலே பார்க்கப் போனு உங்க தங்கச்சி மகன் வாக் செய்ய வந்திருந்தாரு.

**திரும:** என்ன! என் தங்கச்சி மகன் வந்திருந்தானு? (பதைக்கிருர்)

**ஆறு:** ஆமாம். நான் கூட அதைத் தெரிஞ்சுக்கத்தான் உங்க வீட்டுக்கு அவனை அழைச்சுகிட்டுப் போனேன். உங்க பொண்ணு கமலமும் அத்தான்னு ஒத்துக்கவே சந்தேகம் நீங்கிச்சு. காலா காலத்திலே அந்தப் பெண்ணுக்கு ஒரு மூக்கணுங் கயிறு போடுங்க.

**திரும:** ஆறுமுகம்.

**ஆறு:** என்னங்க?

**திரும:** நீ ஏமாற்றப்பட்டாய். எனக்குக் கூடப்பிறந்தவங்களும் கிடையாது. என் பெண்ணின் பெயர் கமலமு

**ஆறு:** அப்போ, உங்க வீட்டிலே இருக்கும் அந்த அம்மா யாருங்க?

**திரும:** அவங்க என் தங்கை இல்லே.

**ஆறு:** பாவிப்பய முட்டாள்தனம் செய்துட்டனே. கொஞ்சம் விளக்கமாகச் சொல்லுங்க.

**திரும:** நாலு வருஷத்துக்கு முன்பு ஒரு நாள்:—

**[திருமலையின் வீடு - மயக்கமுற்றிருக்கும் கற்பகம் கண் விழித்தல் - திருமலையும், உஷாவும் அருகில் இருக்கின்றனர்.]**

**கற்ப:** நான் எங்கே இருக்கிறேன்? நீங்களெல்லாம் யார்?

**திரும:** நான் இந்த ஊர் சத்தியபுர ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர். நீங்க தண்டவாளத்தின் பக்கத்திலே மயக்க மாகக் கிடந்தீர்கள். நான் காப்பாற்றி உங்களை என் வீட்டிற்குக் கொண்டுவந்தேன். நீங்க யாரம்மா?

**கற்ப:** (வருத்தத்துடன்) தயவு செய்து என்னை ஒன்றும் கேட்காதீர்கள். நான் ஓர் அனாதை.

**திரும:** சரி. நீங்க ஒன்றும் சொல்ல வேண்டாம். உடம்பை அலட்டிக் கொள்ளாதீர்கள்.

**கற்ப:** என்னால் உங்களுக்குக் கஷ்டம் வேண்டாம். நான் போய் விடுகிறேன். நீங்கள் செய்த உதவிக்கு மிக்க நன்றி.

**திரும:** நீங்கள் எங்கேயும் போகவேண்டாம். இது உங் களுடைய வீடு மாதிரி நினைச்சு, இங்கேயே இருங்கள்.

**உஷா:** ஆமாம். அப்பா சொல்வது போல நீங்கள் இங் கேயே இருங்கள்.

**திரும:** நான் உங்களைக் காரணமாகவே இங்கு இருக்கச் சொல்கிறேன். இந்தத் தாயில்லா பெண்ணுக்கு நீங்கள் இங்கேயே இருந்தால், உற்ற துணையாக இருக்கும்.

**உஷா:** சரின்னு சொல்லுங்க.

**கற்ப:** நான் இங்கே இருப்பதில் எனக்கு ஒருவித ஆட் சேபணையுமில்லை. ஆனால், என் வாழ்க்கையைப் பற்றி மட்டும் என்னிடம் ஒன்றும் கேட்கவேண்டாம்.

**உஷா:** அப்படியே ஆகட்டும்.

**கற்ப:** உங்களைப் போல நல்லவங்க கிடைச்சதுக்கு ரொம்ப சந்தோஷம்.

**திரும:** நீங்க என் தங்கை மாதிரி. இங்கே உங்களுக்கு ஒருவித குறைவும் இருக்காது.

**உஷா:** உள்ளே வாங்க.

**திரும:** (ஆறுமுகத்தினிடம்) இதானப்பா அவங்களுடைய

**ஆறு:** அப்படியா! அவன் உங்க வீட்டிலேதான் இருப்பான். வாங்க, போகலாம். (போகிறார்கள்)

# 14. அன்பு

[திருமலையின் வீடு - தோட்டத்தில் உஷாவும், சுந்தரும் பேசுகின்றனர்.]

**சுந்:** *கமலம்! உன் அன்பையும், இந்த உதவியையும் என்றும் நான் மறக்கமாட்டேன்.*

**உஷா:** *என்னைப் பார்த்ததும் எப்படி என் பெயர் கமலமென்று உங்களுக்குத் தெரிந்தது?*

**சுந்:** *செந்தாமரைப் போன்ற உன் முகத்தைப் பார்த்தால் தெரியவில்லையா?*

**உஷா:** *கேலியாகப் பேசினாலும் நீங்கள் தோற்றவர்தான். நான் கமலமுமில்லை; கனகாம்பரமுமில்லை. என் பெயர் உஷா.*

**சுந்:** *உஷா - சுந்தர்!*

**உஷா:** *என்ன?*

**சுந்:** *நாம் இருவரும் பேசுவதை அன்னியர் பார்த்தால், உஷார் என்றேன்.*

**உஷா:** *ஆமாம். உங்களைப்போலப் பலர் டிக்கெட் வாங்காமல் பிரயாணம் செய்தால் கவர்மெண்டிற்கு நஷ்டம் ஏற்படாதா?*

**சுந்:** *டிக்கெட் வாங்கியிருந்தால் உன்னைப் போன்ற அழகிய பெண்ணை எனக்கு கவர்மெண்ட் தந்திருக்குமா?*

**உஷா:** *என்ன யிருந்தாலும் டிக்கெட் வாங்காமல் வந்தது தவறுதான்.*

**சுந்:** *நீ ஸ்டேஷன் - மாஸ்டர் திருமகளென்பது தெரியும். ஏதோ, அவசரத்தில் ஏறிவிட்டேன்.*

**உஷா,** *அப்பா வருகிறார்!*

**சுந்:** *போலீஸ்காரன் கூட வருகிறானே! உஷா, உஷார்! (ஓடுகிறான்.)*

**திரும:** *உஷா, எங்கே அவன்?*

**உஷா:** *யாரப்பா?*

**ஆறு:** *மருமகப்பிள்ளை!*

**திரும:** (தேடிய பின்னர்) ஓடிப்போய் விட்டான்.

**ஆறு:** ஓடாமலிருப்பானு? இப்ப கணக்க என் எதிரே இருந்தால்.........

**உஷா:** இல்லையே!

**திரும:** என்னம்மா, விளையாட்டு? அநியாயமா ஆறுமுகத்தின் கேசைக் கெடுத்துவிட்டாயே!

**உஷா:** மன்னித்துவிடுங்களப்பா! அவரைப் பார்த்தால் நல்லவர் மாதிரி இருக்கவே, தவறு செய்துவிட்டேன்.

**ஆறு:** (கோபத்துடன்) இரண்டு 'கவர்மெண்ட்' உத்தியோகஸ்தர்களை ஏமாற்றியவனு நல்லவன்?

**திரும:** ஆறுமுகம்! உஷாவை மன்னித்து விடு.

**ஆறு:** என் இருபது வருஷ சர்வீசிலே இதுதான் பெரிய ஏமாற்றமுங்க!

**திரும:** டிக்கெட் வாங்காமெ பிரயாணம் செய்வதிலே அவன் எத்தனை வருஷ சர்வீசோ! இல்லாவிட்டால் எல்லோா கண்ணிலும் மண்ணைத் தூவ முடியுமா?

**ஆறு:** தூவிட்டானே!

## 15. இரத்தபாசம்

[ஆறுமுகத்தை மீண்டும் கண்டு ஓடிவரும் சுந்தர் திருவேங்கடத்தின் காலி மிட்டாய்க் கடையில் உட்கார்ந்து வியாபாரம் செய்தல் - திருவேங்கடம் வருகிறார்.]

**சுந்:** என்னை மன்னித்துவிடுங்கள். ஆபத்திலிருந்து தப்பத் தவறு செய்துவிட்டேன். ஏன், இப்படி விரைத்துப் பார்க்கிறீர்கள்?

**திருவே:** மணி! திரும்பி வந்துவிட்டாயா! இத்தனை நாளா எங்கே போயிருந்தே? தள்ளாத தாத்தாவை விட்டுட்டு இப்படித் தனியா போயிடலாமா?

**சுந்:** நீங்க நினைக்கிற மணி நானில்லை.

**திருவே:** நீ யாராயிருந்தாலும் பரவாயில்லை. உள்ளே வா. நடந்ததை யெல்லாம் விபரமாகச் சொல்றேன். (வீட்டினுள்ளே) இதானப்பா என் வீடு.

**சுந்:** என்னிடம் என்ன சொல்லவேண்டும்?

**திருவே:** (கலக்கத்துடன்) என் பேரன் ஒருவன், சின்ன வயதிலேயே கெட்ட நடத்தையோடிருந்தான். கோபத்திலே அடித்து, ஒரு நாள் வீட்டை விட்டே துரத்திட்டேன். அன்னிக்குப் போனவன் இன்னும் வீடு திரும்பவே இல்லே. உன்னை இன்னிக்குப் பார்த்ததும் என்றுமில்லாத சந்தோஷம் ஏற்படுகிறது. என் பேரன் இனி வீடு திரும்பமாட்டான். இனிமே நீதான் என் பேரன். என் சொத்தெல்லாம் இனி உனக்குத் தான். சரின்னு ஒரு வார்த்தை சொல்லப்பா. அது இந்தத் தள்ளாத கிழவனுக்கு ஆறுதலாக இருக்கும். சொல்லு தம்பி, சொல்லு.

**சுந்:** நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது? விதி விளையாடும்; சதி சூழ்ச்சி செய்யும்; உண்மை நிலைத்திருக்கும். இவ்வளவு நீங்கள் இரத்த பாசத்திஞல் ஏங்கி கேட்டுக் கொளளும்போது என் மனம் இளகாமலிருக்குமா? உங்களிஷ்டம். என் அதிருஷ்டம்.

**திருவே:** உன் பேர் என்னப்பா?

**சுந்:** சுந்தர்.

**திருவே:** அழகான பெயர். நீ எங்கே இருக்கே? உன்னேடு வேறு யார் இருக்காங்க?

**சுந்:** தற்சமயம் உங்களைத் தவிர வேறு ஒருவருமில்லை தாத்தா.

**திருவே:** தாத்தா! என் வயித்திலே பாலை வாத்தாயப்பா.

**சுந்:** எழுந்திருங்க. உங்களை விட்டுப் பிரியவே மாட்டேன்.

## 16. நாம் இருவர்

[திருமலையின் வீடு - தோட்டத்தில் உஷா பாடிக் கொண்டிருக்கிருள்-பின்புறமாகச் சுந்தர்வந்து கண்ணை மூடுதல்.]

**உஷா:** யாரது? கண்ணை விடுங்கள்; விடுங்கள்.

**சுந்:** கதிரவனைக் காணுவிட்டால் கமலம் கூம்பி இருக்கும்! கோபமா, உஷா? பேசமாட்டாயா?

**உஷா:** உங்களைக் கேட்கப் போகும் கேள்விகளுக்கு முதலில் பதில் சொல்ல வேண்டும்.

**சுந்:** 'எஸ் மேடம்.'

**உஷா:** உங்களுக்குத் தாய் - தந்தை இருக்கிறார்களா?

**சுந்:** 'லேது.'

**உஷா:** உடன் பிறந்தவர்கள்?

**சுந்:** அண்ணன் ஒருவனிருந்தான்; அவனும் பிரிக்கப்பட்டு விட்டான்.

**உஷா:** இப்போ எங்கே இருக்கிறீர்கள்?

**சுந்:** 'இந்தக் கார்டன்.'

**உஷா:** சரியாக பதில் சொல்லாவிட்டால் பெயிலாக்கிவிடு வேன்.

**சுந்:** அதுமட்டும் வேண்டாம் தாயே! இதுவரை ஒரு கிளாசிலேகூட நான் குண்டுபோட்டது கிடையாது.

**உஷா:** அப்போ கேள்விக்குச் சரியான பதில் சொலுங்கள்.

**சுந்:** பஜாரிலுள்ள திருவேங்கடம் மிட்டாய்க் கடையிலிருக் கிறேன்.

**உஷா:** காதலி யாராவது உண்டா?

**சுந்:** 'மேரா சாம்னே கடி ரஹி!'

**உஷா:** உம்.

**சுந்:** வாத்தியாரம்மா வேலை முடிந்துவிட்டதா?

**உஷா:** (சிரித்து) உங்களுக்கு எல்லா மொழிகளும் தெரி யுமா?

**சுந்:** எனக்கு மட்டும் எல்லா மொழிகளும் தெரிந்தென்ன பயன்?

**உஷா:** ஏன் பயனில்லை? பல மொழியிலும் காதலிகள் கிடைப்பார்கள்.

**சுந்:** (சிரித்து) உனக்கு எத்தனை மொழி தெரியும்?

**உஷா:** நன்றாகத் தமிழும் - ஆங்கிலமும்.

**சுந்:** நம் நாட்டுக்கே அவை இரண்டும் போதும்.

**உஷா:** தனித்து ஆண் - பெண் இருவர் சந்தித்து மொழிப் பிரச்சனையா செய்வது?

**சுந்:** புதுவிதமான காதல் ஜோடி! உஷா.

**உஷா:** போங்கள்.

**சுந்:** ஏன்? உன் அப்பா அல்லது போலீஸ்காரர் வருகிறாரா?

**உஷா:** (கொஞ்சலாக) நேற்று உங்களைத் தப்பவைத்ததுக்கு நான் மன்னிப்புக் கேட்டுக் கொண்டேன்.

**சுந்:** கணவனே கண்கண்ட தெய்வம்!

**உஷா:** உஷ்!

**சுந்:** ஏன்?

**உஷா:** புஷ்ஷிலே அத்தை!

**சுந்:** அப்போ, 'கிஸ்'சுக்கு முடியாதே! (சிரிக்கின்றனர்.)

## 17. கள்வனின் காதலி

[மலை வீடு-வேதாசலமும், மோகனுவும் சதுரங்க விளையாட்டில் சிரிக்கின்றனர்.]

**வேதா:** என்னை ஜெயித்துவிட்டாய்!

**மோகனு:** நான் உங்கள் அடிமை. உங்களை ஜெயித்து என்ன லாபம்?

**வேதா:** தவறு. நானல்லவா உன் அடிமையாக்கப் பட்டேன்.

**மோகனு:** ஓர் ஆண், பெண்ணுக்கு அடிமையாகக் கூடாது; தப்பு.

**வேதா:** நீ பேசக் கற்றவள். உன்னோடு நான் பேச முடியுமா?

**மோகனு:** இரண்டாவது ஆட்டம் ஆடலாமா?

**வேதா:** வேண்டாம். களைப்பாக இருக்கிறது.

**மோகனு:** என்னோடு ஓர் ஆட்டம் ஆடுவதற்குள் களைத்து விட்டதா? நான் வருகிறேன்.

**வேதா:** கோபித்துக் கொள்ளாதே மோகனு. உண்மையில் மிகவும் களைப்பாக இருக்கிறது.

**மோகனு:** என் விருப்பத்தை எப்போது நிறைவேற்றப் போகிறீர்கள்?

**வேதா:** அதிவிரைவில் உன்னை ஏற்றுக் கொள்கிறேன்.

**மோகனு:** சத்தியம் செய்யுங்கள்.

**வேதா:** தேவை யில்லை; என்னை நம்பு.

**மோகனு:** நம்பிக்கைத் துரோகம் செய்தால் பாவம் என்பது நினைவிருக்கட்டும்.

**வேதா:** தெரியும்.

**மோகனு:** உங்களை நான் பணத்திற்காக நேசிக்கிறேன் என்று நினைத்துக்கொண்டீர்களா?

**வேதா:** சேச் சே. அப்படி உன்னை நினைப்பேனு? பணம் இன்று வரும்; நாளை போய்விடும். வாழ்க்கையில் அன்பு ஒன்றுதானே நிலைத்திருக்கும்?

**மோகனு:** நம் அன்பை, மற்றவர்கள் தெரிந்துக்கொள்ள வேண்டாமா? இல்லாவிட்டால், கள்வனின் காதலி யென்றுதானே என்னை ஏசுவார்கள்!

**வேதா:** வருந்தாதே மோகனு! உன் இச்சையை பூர்த்தி செய்கிறேன். வா, போகலாம்.

## 18. சந்திப்பு

**[திருவேங்கடத்தின் வீடு - வெளியிலிருந்து வரும் சுந்தர் சின்னுளப்பட்டி கிராமத் தலைவன் சண்டி முனியனிடம் பேசுதல்.]**

**சுந்:** சண்டி முனியனு! எனக்காக வெகு நேரமா காத்துக் கொண்டிருக்கிறீர்களா? உட்காருங்க.

**சண்டி:** பரவாயில்லை. இப்பொழுதுதான் வந்து சிறித் நேரமாகிறது.

**சுந்:** என்ன விஷயம்?

**சண்டி:** நான் சொல்வதற்கு என்ன இருக்கிறது. லண்டனி லிருந்து நீங்கள் வந்ததும் குடிமக்களின் குறைகளை நீக்குவீர்கள் என்று நினைத்தால், கோபித்துக்கொண்டு தனியாக வந்துவிட்டீர்கள். மீண்டும் நீங்கள் ஊருக் குத் திரும்பி வராவிட்டால், குடி மக்களின் கதி அதோ கதிதான்.

**சுந்:** எல்லாம் எனக்குத் தெரியும். இருந்தாலும் இரக்க மற்ற கல் நெஞ்சம் படைத்த அந்தக் கயவனின் முகத்தில் மீண்டும் விழிக்க எனக்கு விருப்பமில்லை. தயவு செய்து என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்.

**சண்டி:** உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். சின்னுளப்பட்டி குடிமக்கள் எல்லோரும் சேர்ந்து பொதுக் கூட்டம் ஒன்று நடத்தி, உங்களையே ஜமீன்தாராக்க வேண்டும்; இல்லையென்றால்,அந்தப் பதவியே தேவையில்லை யென்று தீர்மானம் கொண்டுவரப் போகிறோம். அதற்கு, உங்களுடைய அனுமதியைக் கேட்கவே வந்தேன்.

**சுந்:** நீங்கள் கூட்டம் கூடிப் போராடுவதில் எனக்கு ஆட்சேபனை எதுவுமில்லை. ஆனால், அமைதிக்குக் கேடு விளைவிக்காமல் கூட்டம் நடத்தப்படவேண்டும்.

**சண்டி:** அப்படியே. மற்றொன்று, கூட்டத்திற்கு நீங்களே தலைமை வகிக்கவேண்டுமென்பது குடிமக்களின் விருப்பம்.

**சுந்:** வேண்டாம். அது அழகன்று. பதவிக்கு ஆசைவைத்து அண்ணனுக்கு துரோகம் செய்ய நினைப்பதாக ஒரு சிலர் எண்ணக்கூடும். ஆனால், என் அன்பும், ஆதரவும் என்றும் உங்களுக்கு இருக்கும்.

**சண்டி:** மிக்க நன்றி. வருகிறேன்.

## 19. நல்லகாலம்

[சத்தியபுரம் போலீஸ் ஸ்டேஷன் - இன்ஸ்பெக்டரும், ஆறுமுகமும் பேசுதல்.]

**இன்ஸ்:** ஒன் டொண்டி த்ரீ! என்ன இன்னிக்கு இவ்வளவு லேட்?

**ஆறு:** மன்னிக்கணும். என் மச்சான் இன்னிக்கு ஊட்டிக்குப் போறான். அதனாலே கொஞ்சம் லேட்டாயிடுச்சுங்க.

**இன்ஸ்:** ஏன், நீயும் லீவு போட்டுட்டு அவரோடு போறது தானே?

**ஆறு:** என்னைப்போலவங்களுக்கு ஏது அந்தக் 'குளு,குளு' வாசம்? எதுக்கும் கொடுத்துவைக்க வேண்டாமா?

**இன்ஸ்:** என்னவோ ஊட்டியில் பிறந்து, ஊட்டியிலேயே வாழ்ந்தவன் மாதிரி பேசுறையே! தப்பியோடின கைதி ஒருவனைப் பிடிக்க இன்னும் வழி இல்லே. ஊட்டிக்குப் போருராம். செக்குமாடு மாதிரி உழைக்கிற ஏழைங்களெல்லாம் கோடைக்கு ஊட்டிக்கும், சிம்லாவுக்குமா போருங்க? ஊட்டிக்கு போகணும்னு சொல்ல வெட்கமா இல்லே?

**ஆறு:** (ரோஷத்துடன்) சார். இன்னும் கொஞ்ச நாளில் அந்தக் கைதி திகம்பரத்தை பிடித்துக்கொண்டுவரலே என் பேரு ஆறுமுகம் இல்லே.

**இன்ஸ்:** ஓட்டுக்கு கொடுக்கிற வாக்குறுதி மாதிரி காத்திலே பறக்க விட்டுடாதே. காரியத்திலே காட்டு.

**ஆறு:** சார். இனிமேல் எனக்கு நல்லகாலமுன்னு பட்சி யோசியம் சொல்லிடுச்சுங்க!

**இன்ஸ்:** (ஏளனமாக) அப்படியா! போய், அந்தக் 'கம்ப்லேண்ட் புக்கை' எடுத்துக்கொண்டுவாங்க. (ஆறுமுகம் போகிருன்.)

## 20. காதல்

[திருவேங்கடத்தின் வீடு - சுந்தர் மிட்டாய் விற்றல் - கேடி கந்தசாமி வருதல்.]

**கந்த:** என்ன விலே பால் கோவா?

**சுந்:** ஒண்ணு நாலணு!

**கந்த:** நாலணுவா? இரண்டணுன்னு நாலு கொடு.

**சுந்:** இங்கே வியாபாரம் கிடையாது.

**கந்த:** ஆமா, உங்களே எங்கேயோ பார்த்த மாதிரி இருக்குதே.

**சுந்:** வாங்க வந்தீங்களா; இல்லே, வம்புபேச வந்தீங்களா?

**கந்த:** அட, போய்யா. உன் கடையில்லேனு பத்து கடை. ரொம்ப 'ரப்பா' பேசுறையே. (போகிருன்)

**உஷா:** (தன்னைப் பார்க்காமலிருக்கும் சுந்தரிடம்) கடைக் காரரே! இரண்டு லட்டு கொடுங்க.

**சுந்:** உஷா, நீயா! தாதா, இந்தப் பெண் யார் தெரியுமா? போலீஸ்காரனிடமிருந்து முன்பு என்னைக் காப்பாத் தினதாகச் சொல்லவில்லே? அந்தப் பெண்தான் இவள். பெயர் உஷா.

**உஷா:** வணக்கம்.

**திருவே:** நல்லா இருக்கணும்.

**உஷா:** உங்க வாழ்த்து.

**திருவே:** இவன் என் பேரன் மாதிரி. நீங்க இரண்டுப் பேரும், மலரும் மணமும் போல வாழணும்.

**சுந்:** தாதா! கடையைக் கொஞ்சம் பார்த்துக்கங்க. இதோ வந்துடறேன்.

**திருவே:** நீ போ தம்பி.

[வீட்டினுள்ளே உஷாவும் - சுந்தரும்.]

**சுந்:** உஷா! இன்று உன் அலங்காரம் என்னை மயக்குகிறது. சிவப்புச் சொக்காய், கறுப்புப் புடவை, முல்லை மலர் உன் அழகை மும்மடங்காக்கிவிட்டது.

**உஷா:** வர்ணித்துவிட்டால் விருந்தாளியின் பசி அடங்கி விடுமா?

**சுந்:** ஓ... ...இந்தா லட்டு, ஜாங்கிரி, பாதம் பர்பி; எடுத்துக் கொள்.

**உஷா:** நீங்களும் எடுத்துக் கொள்ளுங்கள்.

**சுந்:** உன் பேச்சைக் காட்டிலுமா இவைகள் எனக்கு இனிக்கப் போகின்றன? உஷா!

**உஷா:** அதெல்லாம் கல்யாணத்திற்குப் பிறகுதான்!

**சுந்:** நாம் கல்யாணம் செய்துகொள்ளவேண்டாம் உஷா.

**உஷா:** ஏன்?

**சுந்:** காதல் புரிவதிலுள்ள இன்பம் கால்யாணத்தில் கிடையாது.

**உஷா:** எங்கே உங்களுக்கு என்னை பிடிக்கவில்லேயோ என்று பயந்துபோய் விட்டேன்.

**சுந்:** (புன்முறுவலுடன்) உஷா! நேற்று உன்னைக் காண வரும்போது பாடிக்கொண்டிருந்தாயே, அந்தப்பாட்டை மீண்டும் நான் கேட்கலாமா?

**உஷா:** அந்தப் பாட்டைத்தான் பாடவேண்டுமா?

**சுந்:** நீ எந்தப் பாட்டைப் பாடினாலும் எனக்குச் சம்மதம்.

**உஷா:** (பாட்டு ஒன்று பாடி முடிந்ததும்) பாடியதற்குப் பரிசு?

**சுந்:** இந்த முத்தாரம்.

**உஷா:** அது போதாது. நீங்களும் ஒரு பாட்டுப்பாட வேண்டும்.

**சுந்:** வேண்டாம். நான் பாடினால் நீ ஓடி விடுவாய்!

**உஷா:** அந்த ரூப்பு என்னிடம் பலிக்காது. உங்க இனிமையான பேச்சே, நீங்கள் நன்றாகப் பாடுபவர் என்பதைச் சொல்லும்.

**சுந்:** (பாட்டு ஒன்று பாடி முடிந்ததும்) நான் பாடியதற்கு என்ன பரிசு தரப் போகிறாய்?

**உஷா:** என் அன்பு.

**சுந்:** (சிரித்து) உஷா! (இருவரும் கூடுகின்றனர்)

## 21. நல்ல தீர்ப்பு

[சின்னாளப்பட்டி கிராமத் தலைவன் சண்டிமுனியன் தலைமையில் பொதுக்கூட்டம் ஒன்று நடை பெறுகிறது - எல்லோரும் கை தட்டுகின்றனர்.]

**சண்டி:** சகோதர, சகோதரிகளே! உங்கள் அனைவருக்கும் என் வணக்கம். ஜமீன்தார் வேதாசலத்தின் அக்கிரமச் செயல்களைக் கண்டித்து நம் கருத்தைத் தெரிவிக்க இக்கூட்டம் கூடியுள்ளது என்பதை அறிவீர்கள். கடந்த நாலு வருஷமாக ஜமீன்தாரின் போக்கு வேடிக்கையும், விசித்திரமாகவும் உள்ளது. அவருடைய அறிவியல் செயல்களுக்கு நம்மை

ஆளாக்கப்பார்க்கிருர். உடன் பிறந்த தம்பியைஅக்கிரமமாக வெளியேற்றலாமா என்று கேட்டால், அது தன் சொந்த விஷயமென்கிருர் மதிப்பிற்குரிய வேதாசலம்! நம்முடைய துயரைத் துடைக்கவேண்டு மென்று சொன்னவரை விவேகம், நேர்மை யில்லாமல் வீட்டை விட்டு வெளியேற்றியதா, சொந்த விஷயம்? இந்தக் கொடிய செயலுக்கு உடனடியாக நல்ல தீர்ப்பு வழங்க வேண்டும். ஒன்று ஜமீன் பதவியில் சுந்தரை அமர்த்த வேண்டும். இல்லையென்ருல், அந்தப் பதவியே நமக்குத் தேவையில்லை. பணமிருக்கிறது ஜமீன்தாரிடம். நம் எண்ணத்திற்கு இடையூருக எதுவும் செய்வார். அவைகள் எதற்கும் அஞ்சாமல் உறுதியுடனிருக்க வேண்டும். எங்கே, உங்களது வாக்குறுதியை விண்ணைப் பிளக்க எழுப்புங்கள்.

**மக்கள்:** அஞ்சோம், அஞ்சோம்!

**சண்டி:** வணக்கம்.

[கூட்டத்திற்கு வந்திருக்கும் கேடி கந்தசாமி, கண்ணனிடம் பேசுகிருன்.]

**கந்த:** கேட்டீங்களா?

**கண்:** நன்ருகக் கேட்டேன்.

**கந்த:** எசமா! சத்தியபுரம் திருவேங்கடம் மிட்டாய்க்கடைக்காரன் வீட்டிலே சுந்தர் இருப்பதைப் பார்த்தேன்.

**கண்:** (யோசித்து) சரி. பிறகுவந்து உன்னைச் சந்திக்கிறேன். (போகிருர்கள்)

## 22. துரோகி

[மலைவீடு - வேதாசலம், கண்ணன் பேசுதல்.]

**வேதா:** என்ன கண்ணு! கண்மண் தெரியாமல் வருகிருய்?

**கண்:** நமக்கு எமன் தோற்றிவிட்டான்.

**வேதா:** எமனு? தோன்றட்டும். அவனுல் நம்மை ஒன்றும் செய்யமுடியாது. என்ன நடந்தது?

**கண்:** ஊரெங்கும் சண்டிமுனியன் தலைமையில் ஒரே புரட்சி. உடன் பிறந்த தம்பியை அநியாயமாக வெளியேற்றிவிட்டு, ஜமீன்தார் சிற்றின்பத்தில் ஆழ்ந்துவிட்டார் என்ற கொக்கரிப்பு. ஜமீன் பதவியில் சுந்தர் அமரவேண்டும்; இல்லையென்றால், அந்தப் பதவியே தேவையில்லை என்ற முரசொலி எங்கும் ஒலிக்கிறது. ஊரே சிரிக்கிறது.

**வேதா:** ஊரென்ன? நாடே சிரிக்கட்டும்; இந்த உலகமே சிரிக்கட்டும். நான் நடத்தை கெட்டவனாக வாழ்ந்தால் இவர்களுக்கென்ன? பணமிருக்கிறது என்னிடம்; அதை என்னிஷ்டம்போல் பரத்தையரிடம் கொடுக்கிறேன். அண்ணன் தம்பிக்குள் ஆயிரம் சச்சரவுகளிருக்கும்; அதைக் கேட்க இவர்கள் யார்? கண்ணா! இவையெல்லாம் சுந்தரின் சூழ்ச்சி. உண்ட வீட்டிற்கு இரண்டகம் நினைக்க எண்ணிவிட்டான். சொந்த அண்ணனுக்கே துரோகம் செய்ய ஆரம்பித்துவிட்டான், துரோகி! அவன் உயிருடனிருக்கும் ஒவ்வொரு நிமிடமும் நமக்குத் தீங்குதான். இந்த வீட்டைவிட்டுத் துரத்தினது மட்டும் போதாது. இந்த உலகத்தை விட்டே அவன் துரத்தப்பட வேண்டும். இப்போது அவன் எங்கே இருக்கிறான்?

**கண்:** சத்தியபுரம் திருவேங்கடம் மிட்டாய்க் கடைக்காரன் வீட்டிலிருப்பதாக கந்தசாமி சொன்னான். காரியத்தை ஜமீன்தாரே முடிக்கவேண்டும்.

**வேதா:** நான் செய்யவேண்டுமா? வேண்டாம், கண்ணா! எனக்குப் பயமாக இருக்கிறது.

**கண்:** வில்லனாக நடிக்கமட்டும் உங்களுக்கு ஆசை இருக்கிறது. அந்தப் பாகத்திற்குரிய பாபச் செயல்களுக்கு அஞ்சினால் பிறகு எப்படி? மற்றொரு வழியுமிருக்கிறது. ஆனால், வில்லன் செய்யக்கூடிய காரியமில்லை.

**வேதா:** பரவாயில்லை. சொல், கண்ணா! இந்த ஒரு விஷயத்தில் மட்டும் கதாநாயகனைப் பின் பற்றுகிறேன்.

**கண்:** (ஏளனமாக) பட்டம், பதவி, சொத்து, சுதந்திரம் எல்லாவற்றையும், அருமைத் தம்பியை அழைத்து

"என்னை மன்னித்துவிடு சுந்தர்; மன்னித்துவிடு. பாழும் பணத்தாசையினுல் மதி இழந்து உன்னையும், மக்களையும் பகைத்துக்கொண்டேன். அதனுல் நான் அடைந்த லாபமென்ன? பகைமை ஒன்றுதான் மிஞ்சியது. வயதான எனக்கு எதற்கு இந்தச் செல்வமெல்லாம். எல்லாவற்றையும் நீயே வைத்துக்கொண்டு சுகமாக வாழ். உன் வாழ்வில் தென்றல் தவழட்டும். நான் திருந்திவிட்டேன்'' என்று ஜமீன்தார் விரும்பினுல் கொடுத்துவிடலாம்.

**வேதா:** (சிரித்து) நடிப்புப் பிரமாதம். இருந்தாலும் காரியத்தைமட்டு கந்தசாமியை செய்யச் சொல்லி, வேண்டிய பணத்தைக் கொடுத்துவிடு.

**கண்:** ஆயிரம் ரூபாய் தேவைப்படும்.

**வேதா:** பாதகமில்லை. கொடுத்துவிடு.

## 23. ஆசை

[திருமலையின் வீடு - சுந்தர் விட்டுச்சென்ற சர்ட்டிலிருந்து ஜமீன்தார் வேதாசலத்தின் போட்டோவைக் கற்பகம் பார்த்தல் - உஷா வருகிருள்.]

**கற்ப:** (போட்டோவை மறைத்து) இது யாருடைய சர்ட்டு, உஷா?

**உஷா:** வண்ணுன் யாருடையதாவது தவறி கொண்டுவந்து விட்டானு?

**கற்ப:** அப்படித் தவறி இருந்தால் சலவையாக இல்லாமல் அழுக்காகவா இருக்கும்?

**உஷா:** பழைய துணியை விட்டுவிட்டுப் போயிருக்கலாம்.

**கற்ப:** என்னை நீ ஏமாற்ற முடியாது உஷா!

**உஷா:** என்ன அத்தே உங்களை ஏமாற்றிவிட்டேன்?

**கற்ப:** நீயும் அந்த 'டிக்கெட் லெஸ் டிராவலும்' பேசிக் கொண்டிருந்ததை நான் பார்க்கவில்லையென்று நினைத்துக் கொண்டாயா?

**உஷா:** *(காலில் விழுந்து) அத்தே! தாயற்ற என்னை அன்னைபோல் வளர்த்துவரும் உங்களிடம் ஏன் பொய் சொல்லவேண்டும்? சந்தர்பம் அன்று அவரைச் சிச்க வைத்தது. அது என் பாக்கியமென்றே நான் கருது கிறேன். அவர் அழகில் சுந்தரர்; அறிவில் அறிஞர்; பேச்சில் நாவலர்; குணத்தில் கருணாநிதி......*

**கற்ப:** *அவர்தான் என் இலட்சிய புருஷர். என்றால் அவரை மறக்கமுடியாது. அவரைத் தவிர வேறு ஒருவரும் என் இதயத்தில் இடம் பெறமாட்டார்! எப்படியாவது அப்பாவினிடம் புரட்சிசெய்து என்னை அவருடைய ஆசைநாயகியாக்கிவிட வேண்டியது உங்கள் பொறுப்பு என்று சொல்றே! இல்லையா, உஷா!*

**உஷா:** *போங்களத்தே!*

**கற்ப:** *அன்றுகூட உன் அன்பழகன் என் பிள்ளையென்று தானே சொன்னார். நானே சம்பந்தி முறையில் அப்பா வினிடம் விஷயத்தை வெளியிடுகிறேன். இப்போ சந்தோஷம்தானே!*

**உஷா:** *அத்தே! நீங்கள் எனக்கு ஓர் உபகாரம் செய்ய வேண்டும்.*

**கற்ப:** *முடியுமானால் செய்கிறேன்.*

**உஷா:** *செய்கிறேன் என்று சொல்லுங்கள்.*

**கற்ப:** *செய்கிறேன்.*

**உஷா:** *(கடிதம் ஒன்று எழுதி) இந்தக் கடிதத்தை பஜாரி லுள்ள திருவேங்கடம் மிட்டாய்க் கடையிலிருக்கும் அவரிடம் கொண்டுபோய்க் கொடுக்க வேண்டும்.*

**கற்ப:** *இந்தத் தமயந்தியின் லிகிதத்தை அந்த நளமகராஜ ரிடம் கொண்டுபோய்க் கொடுக்க நானென்ன அன்னமா?*

**உஷா:** *அன்னமில்லே, அத்தே!*

**கற்ப:** *அப்போ, என்னைத் தபால்காரி வேலைக்கு அனுப்பு றியா? இதுதான் முதல் தடவை. நல்லவேளை, கெட்ட வேளை பார்த்து வேலைக்குப் புறப்படனும். அதை யோசிக்க எனக்கு கொஞ்சம் இடைவேளை தேவை! (சிரிக்கின்றனர்)*

# 24. பாசவலை

[திருவேங்கடத்தின் வீடு - கற்பகம் வருதல்.]

**சுந்:** வாருங்கள். என்ன விஷயம்?

**கற்ப:** இந்தப் 'போட்டோ' உங்களுடைய சர்ட்டில் கிடைத்தது. (வேதாசலத்தின் படத்தைக் கொடுத்தல்)

**சுந்:** (கோபத்துடன்) இவனுடைய படம்! (கிழித்தல்) இவன் முகத்தில் விழித்தாலே பாவம்!

**கற்ப:** ஏன் இவ்வளவு கோபம்? யார் இவர்?

**சுந்:** (ஏளனமாக) அண்ணனென்று எனக்கு உலாவி வருபவன்; இவனுக்கு ஒரு ஜமீன் பதவி!

**கற்ப:** அப்போ நீங்கள் ஜமீன்தாரின் தம்பியா? உங்கள் அண்ணு எந்த ஜமீனைச் சார்ந்தவர்?

**சுந்:** சின்னளப்பட்டி.

**கற்ப:** ஏன் நீங்கள் தனியாகப் பிரிந்து வந்துவிட்டீர்கள்?

**சுந்:** அது ஒரு கதை.

**கற்ப:** நான் கேட்கலாமா?

**சுந்:** படிப்பிற்காக நான் லண்டன் சென்றிருந்த சமயம், லஞ்சம், சூது இவையே தொழிலாகக் கொண்டு, சிற்றின்பத்தில் மூழ்கிவிட்டான் இவன். நான் வெளி நாடு செல்வதற்கு முன்பிருந்த நல்ல போக்கிற்கு, திரும்பும்போது மாருகக் காணப்பட்டது. விஷயமறிந்து சண்டையிட்டேன். சமரசமாக இருந்தால், உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் அளிப்பதாகச் சொன்னுன். அதற்கு இணங்க விரும்பாத நான், மானத்தைப் பெரிதெனக்கருதி வெளியேறி விட்டேன். (கற்பகம் கண்ணீர் வடித்தலைக் கண்டு) ஏன், நீங்கள் கண் கலங்குகிறீர்கள்?

**கற்ப:** ஒன்றுமில்லை.

**சுந்:** பாசவலையால் உண்மையை மறைக்கப் பார்க்காதீர்கள். உங்கள் கண்ணீருக்குக் காரணம் இருக்கிறது.

விஷயத்தைச் சொல்லுங்கள். என்னுல் ஆன உதவியைச் செய்கிறேன். சொல்லுங்கள்.

**கற்ப:** வேறென்றுமில்லை. உங்கள் வாழ்க்கையின் இன்னலைக் கேட்க வருத்தமாக யிருந்தது. இந்தாருங்கள். (உஷாவின் கடிதத்தைக் கொடுத்தல்.)

**சுந்:** (கடிதத்தைப் படித்து) தாத்தாவிற்கு உடம்பு குணமில்லை. நாளை மாலை வந்து சந்திப்பதாகச் சொல்லுங்கள்.

**கற்ப:** சரி. வருகிறேன். (போகிருள்)

## 25. பணம் படுத்தும் பாடு

[கேடி கந்தசாமியின் வீட்டில் நாட்டியம் ஒன்று நடக்கிறது - அது முடிந்ததும், கண்ணன் வருகிருன்.]

**கந்த:** வாங்க. உங்காருங்க.

**கண்:** உட்காருவதற்கு நேரமில்லை.

**கந்த:** டீ குடிக்கிறீங்களா?

**கண்:** அதெல்லாம் ஒன்றும் வேண்டாம்.

**கந்த:** வந்த விஷயமென்ன?

**கண்:** ஜமீன்தார் வேதாசலத்தின் பரம விரோதி சுந்தரை ஒழிக்கவேண்டும்.

**கந்த:** அப்படியா!

**கண்:** ஏன் பெருமூச்சு வாங்குகிறது?

**கந்த:** வேலையெல்லாம் கச்சிதமா முடிஞ்சுடும். ஆனு, கொஞ்சம் லேட்டாவும்.

**கண்:** ஏன்? எங்களைவிட அதிகப் பணம் கொடுக்கும் வேறு யாருடைய வேலையாவது இருக்கிறதா?

**கந்த:** பணத்துக்கு இல்லீங்க. மூணு, நாலு வாடிக்கை 'புக்கிங்' இருக்குது!

**கண்:** நீ எப்பொழுது வேண்டுமானுலும் செய்துகொள். எங்கள் காரியம் முடியவேண்டும். இந்தாப் பணம்.

**கந்த:** ஐநூறு ரூபாதானே?

**கண்:** காரியத்தை நிறைவேற்று. பிறகு ஜமீன்தார் கவனித்துக்கொள்வார். வருகிறேன்.

**கந்த:** செய்யுங்க. (கண்ணன் செல்ல - பாலையாவிடம்) நல்ல வரும்படிதான்!

**பாலை:** ஏதோ, வாடிக்கைகாரங்க இருப்பதினாலே இந்தப் பணம்.

**கந்த:** உண்மைதான்.

**பாலை:** வாழ்க 'காண்ட்ராக்ட்' காரங்க; வளர்க நம் தொழில்!

**கந்த:** நிறுத்து.

## 26. எதிர்பாராதது

[திருமலையின் வீடு - கற்பகம் வருதல்.]

**உஷா:** அத்தே!

**கற்ப:** (மௌனம்)

**உஷா:** ஏன், அத்தே பேசாமலிருக்கீங்க? அவர் அங்கே இல்லையா? சொல்லுங்களத்தே!

**கற்ப:** உன் கடிதத்தை அவரிடம் கொடுத்துவிட்டேன்.

**உஷா:** அவர் ஏதாவது சொன்னாரா?

**கற்ப:** அந்த மிட்டாய்க் கடைக்காரக் கிழவருக்கு உடம்பு சரியில்லையாம். நாளை மாலை வந்து சந்திப்பதாகச் சொன்னார்.

**உஷா:** நாளை மாலையா!

**கற்ப:** ஏன், உஷா? நாளை மாலை இன்னும் இருபது மணி நேரத்தில் வந்துவிடும்!

**உஷா:** போங்களத்தே.

**கற்ப:** *நீ பால் சாப்பிட்டாயா?*

**உஷா:** *இல்லே.*

**கற்ப:** நான் போய்க் கொண்டுவருகிறேன். தோட்டத்தில் தனியாக நின்று கொண்டிருக்காதே.

**உஷா:** இந்தப் பூர்ண நிலவில், இன்று இரவு முழுவதும் இங்கேயே இருக்கப் போகிறேன்.

**கற்ப:** நீதான் சொல்வதைக் கேட்கமாட்டாயே! எனக் கென்ன? (உள்ளே போகிருள்)

## 27. சபாஷ்! கண்ணு

[மலேவீடு - வேதாசலமும், கண்ணனும்.]

**வேதா:** *(சிரித்து) சபாஷ்! கண்ணு. இன்ருேடு சுந்தர் ஒழிந்தான். இனி நம்மை கட்டிப்பிடிக்க ஒருவராலும் முடியாது.*

**கண்:** *எல்லாம் பணம் படுத்தும் பாடு!*

**வேதா:** *கண்ணு! முன்பு என்னிடம் ஒரு வாக்குறுதி தந்தாயே, அது நினேவு இருக்கிறதா?*

**கண்:** (புன்முறுவலுடன்) மறந்துவிடுவேனு? சத்தியபுரம் வண்ணக் கிளியைத்தானே சொல்கிறீர்கள்? நன்ருக நினேவிருக்கிறது.

**வேதா:** *காரியத்தை முடிக்க ஐயரை நாள் பார்க்கச் சொல்லி யிருக்கிருயா?*

**கண்:** *என்னேயே ஏளனம் செய்கிறீர்களே? இதோ, போகிறேன். (போகிருன்)*

## 28. இதய கீதம்

[திருவேங்கடத்தின் வீடு - திருவேங்கடமும், சுந்தரும் பேசுதல்.]

**சுந்:** *தாதா! இந்த மருந்தைச் சாப்பிடுங்கள்.*

**திருவே:** (இரும்பிக்கொண்டே) வேண்டாம். எனக்கு எதற் கப்பா? இந்தக் கலர் தண்ணியிலா என் உடம்பு குணமாகிவிடப் போகிறது?

**சுந்:** *பரவாயில்லே; சாப்பிடுங்கள்.*

**திருவே:** (*மருந்தைக் குடித்து*) *சுந்தர்! ஒரு பாட்டுப்பாடேன். அதைத் நான் கேட்டுக்கிட்டே தூங்கறேன்.*

[பாட்டு ஒன்று பாடிமுடித்து, சுந்தர் திருவேங்கடத்தின் பக்கத்தில் படுத்துக்கொள்ளுதல்.]

## 29. பராசக்தி

[தெருவில் போலீஸ்காரன் ஆறுமுகமும், மற்றொரு போலீஸ்காரனும் சந்திக்கின்றனர்.]

**போலீஸ்:** *(கையைத்தட்டி) ஒன் டொண்டி த்ரீ!*

**ஆறு:** *(திரும்பிப்பார்த்து) 'டியூட்டிக்கு' கிளம்பும்போது கூப்பிட்டாயா? என்ன விஷயம்?*

**போலீஸ்:** *என்ன இன்னிக்கி 'நைட் டியூட்டியா?'*

**ஆறு:** *ஏன், பார்த்தால் தெரியில்லையா?*

**போலீஸ்:** *கோபிச்சுக்காதே.*

**ஆறு:** *சும்மா இந்த அஸ்திவாரமெல்லாம் வேணும். எதுக்குக் கூப்பிட்டே? விஷயத்தைச் சொல்லு.*

**போலீஸ்:** *ஒரு பத்து ரூபாய் கடன் வேணும். அடுத்த மாதம் கொடுத்துடறேன்.*

**ஆறு:** *நேற்றுத்தானே சம்பளம் வாங்கினே. அதுக்குள்ளேயா எல்லாப் பணத்தையும் செலவழிச்சுட்டே?*

**போலீஸ்:** *என்ன செய்யிறது? குழந்தைகுட்டி பெறுவதிலே, ஏழைக்குத்தானே பராசக்தியின் அருள் கிடைக்குது.*

**ஆறு:** *குழந்தைதாம்பா நாட்டுக்குச் செல்வம். அதன் வளர்ச்சியிலே தடை செய்யக்கூடாது. எனக்குக்கூடத் தான் அரை டஜன் இருக்குது. அதையெல்லாம் கிணத்திலேயா புடுச்சுத் தள்ளிட்டேன்?*

**போலீஸ்:** என்ன இருந்தாலும், ஒரு வீட்டுக்கு மூணு குழந்தைப் போதும்.

**ஆறு:** அட, குழந்தை இல்லாதவன் வீட்டுக்கு, நம்ப வீட்டு அதிகக் குழந்தையைச் சேர்த்தா கணக்குச் சரியா போவுது.

**போலீஸ்:** நமக்கேன் அந்த விவகாரம்? நான் கேட்டதெ......

**ஆறு:** இந்தா பத்து ரூபா! ஞாபகமாத் திருப்பிடு. அவ்வளவுதான்.

**போலீஸ்:** நல்ல ஞாபகச் சக்திக்கு டாக்டர் எழுதிக் கொடுத்த மருந்தை வாங்கத்தான், இந்தப் பணம் கேட்டேன்.

**ஆறு:** சரிதான்!

**போலீஸ்:** எனக்குகூட 'நைட் டியூட்டி'தான். இரு, நானும் வரேன். (போகின்றனர்)

## 30. மாயமனிதன்

[திருமலையின் வீடு - தோட்டத்தில் தனித்து உட்கார்ந்திருக்கும் உஷாவின் 'இன்பக்கனவு' முடிந்ததும்-கண்ணன் வருகிறன்.]

**கண்:** இங்கேதான் இருக்கிறயா? நீ பலே கெட்டிக்காரி. அன்று எங்களை ஏமாற்றிவிட்டு, தப்பி ஓடிவந்து விட்டாயே!

**உஷா:** யார் நீங்கள்? உங்களை நான் பார்த்ததுகிடையாதே!

**கண்:** அழகான உடலைப் பெற்றிருப்பதுபோல, சாமர்த்தியமாகப் பேசவும் கற்றுக்கொண்டிருக்கிறய்! உன்னை நேசிக்கும் ஒருவரை நீ விரும்பாமலிருப்பது நியாயமா?

**உஷா:** என் முகத்தைப் போன்ற வேறு யாராவது உங்களை ஏமாற்றி இருக்கலாம். அது நான் இல்லை.

**கண்:** நீ யாராக இருந்தாலென்ன? எங்களுக்கு வேண்டியது உன் போன்ற இளங்கனி! பசித்தப்போது

புசிப்போம். ஓடாதே! நில். என்னிடமிருந்து தப்ப முடியாது.

**உஷா:** சீ! என்னை யார் என்று நினைத்துக்கொண்டாய்? (கண்ணன் கன்னத்தில் அடித்தல்)

**கண்:** இவ்வளவு திமிரா? (இழுத்துச் செல்லல்)

**உஷா:** என்னை விடு. சண்டாளா; துரோகி. ஐயோ, அத்தே!

**கண்:** சத்தம் போடாதே. வா, கழுகுனிடம்.

[காரில் மறையும் சமயம் - கற்பகம் உள்ளிருந்து வருதல்.]

**கற்ப:** (தனக்குள்) ஐயையோ! எவனே, உஷாவை இழுத்துக் கொண்டுப் போகிறனே. அண்ணுகூட வீட்டில் இல்லையே. ஆ! காரின் நம்பர் M. S. L. 3040. (கலக்கத்துடன் உள்ளே போகிருள்)

## 31. ஓர் இரவு

[திருவேங்கடத்தின் வீடு - சுந்தரும், திருவேங்கடமும் முகத்தை மூடிக்கொண்டு உறங்குகின்றனர் - தவறுதலாகக் கேடி கந்தசாமி, திருவேங்கடத்தைக் கொலை செய்துவிட்டு, சுந்தர் எழுந்திருக்கவே, கட்டிலின் அடியில் புகுந்துக் கொள்ளுதல் - வெளியில் உலாவி வரும் போலீஸ்காரன் ஆறுமுகமும், மற்றொரு போலீஸ் காரனும் 'கொலை' என்ற குரலைக்கேட்டு வீட்டினுள்ளே வருகின்றனர் ]

**சுந்:** கொலை, கொலை! ஐயோ, தாதா! உங்களுக்கா இந்த கதி நேரவேண்டும்? அன்பின் பிறப்பிடம், அறத்தின் இருப்பிடம், பண்பின் உறைவிடமான உங்களுக்கும் இந்த உலகில் விரோதிகளிருந்து கொலை செய்துவிட்டார்களே! ஐயோ!

**ஆறு:** இங்கேதான் நீ இருக்கியா?

**சுந்:** ஐயா, யாரோ ஒருவன் இவரைக் கொலை செய்துவிட்டு ஓடிப்போய்விட்டான்.

**ஆறு:** ஆமாம். யாரோ கொலே செய்துவிட்டு ஓடிப்போய் விட்டான்; பாவம்! இவருக்கு ஒண்ணும் தெரியாது. அன்னிக்கித் தப்பிச்சுகிட்டியே. இன்னிக்கி மாட்டிக் கொண்டாயா? கண்ணீர் வடிப்பதிலே பயனில்லே. நட, ஸ்டேஷனுக்கு. ஊம்.

**சுந்:** ஐயோ! இவரை நான் கொலே செய்யவில்லே. எங்கே யாவது ஒருவன் தன் தாதாவைக் கொலே செய்வாளு? அதற்கு அவன் மனம்தான் துணியுமா?

**ஆறு:** (ஏளனமாக) அன்னிக்கி ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டரின் மருமகப் பிள்ளே; இன்னிக்கி மிட்டாய்க் கடைக்கார வீட்டுப் பேரப்பிள்ளே! ஊரிலுள்ள வங்களெல்லாம் உனக்கு உறவு!

**சுந்:** நான் பொய் சொல்லவில்லே!

**ஆறு:** இந்தக் காலத்திலே யார் பொய் சொல்லுவாங்க, ஏமாத்துவாங்கன்னு சொல்ல முடியாது. ரொம்ப யோக்கியன்னு நினேக்கிறவனெல்லாம்தான், நம்பிக்கை துரோகமும், செய்த குற்றத்தை மறைக்க எவ்வளவு கீழ்த்தரமாகவும் நடந்துகிருங்களே! மனுஷன் ஒருதரம் தான் ஏமாறுவான். நட, ஸ்டேஷக்கு.

**போலீஸ்:** ஆறுமுகம்! இதோ, கொள்ளே வேறு அடித்திருக் கிறது.

**ஆறு:** அப்படியா!

**சுந்:** கொலேயும், களவும் செய்த ஒருவன் செய்த இடத்தி லேயே நின்றுகொண்டிருப்பாளு? இதிலிருந்தே நான் குற்றவாளி இல்லே என்பதைத் தெரிந்துகொள்ள லாமே!

**ஆறு:** உன் சினிமா 'டைலாக்கை' இன்ஸ்பெக்டரிடம் காட்டு. கிளம்பு. நைண்டி த்ரீ! நீ இங்கேயே இரு.

[அவர்கள் செல்லுகின்றனர் - நைண்டி த்ரீ வெளிப் பக்கமாகச்செல்லல்- கந்தசாமி எழுந்து வெளிவருதல்.]

**கந்த:** (தனக்குள்) பாவிப்பய மகனே! சொன்னவனேக் கொலே செய்யாமெ, வேறு ஒருத்தனேப் பரலோகம்

*அனுப்பிவிட்டேனே! ஏ, பராசக்தி! நீதான் என் உயிரைக் கண்ணை யாகிட்டேயிருந்து காப்பாத்தணும். (கன்னத்தில் போட்டுக் கொள்ளுதல்)*

## 32. கூண்டுக்கிளி

[மலைவீடு - கம்பத்தில் கட்டப்பட்டிருக்கும் உஷாவின் சோகப் பாட்டு.]

## 33. பிருதிவிராஜன்

[திருமலையின் வீடு - கற்பகமும், திருமலையும் பேசுதல்.]

**திரும:** *கற்பகம்! ஏன் கலக்கத்தோடு இருக்கிறாய்?*

**கற்ப:** *அண்ணா! நம் உஷாவை யாரோ ஒருவன் காரில் கடத்திச் சென்றுவிட்டான்.*

**திரும:** *என்ன?*

**கற்ப:** *ஆமாம், அண்ணா! சற்று முன்புதான் இந்தச் சம்பவம் நடந்தது.*

**திரும:** *அவனுடைய அடையாளம் ஏதாவது தெரியுமா?*

**கற்ப:** *அந்தக் காரின் நம்பர் M. S. L. 3040 என்பதை மட்டும் பார்த்தேன்.*

**திரும:** *சரி. நான் போய்ப் போலீசில் தெரிவிக்கிறேன். நீ வீட்டைப் பார்த்துக்கொள். (போகிறார்)*

## 34. இன்ஸ்பெக்டர்

[சத்தியபுரம் போலீஸ் ஸ்டேஷன் - இன்ஸ்பெக்டர் பேப்பர் படித்துகொண்டிருக்கிறார் - சி.ஐ.டி. ஒருவர் வருகிறார்.]

**சி.ஐ.டி.:** *ரொம்ப 'டீப்பாக' பேப்பர் படிக்கிறீர்களா?*

**இன்ஸ்:** *வாருங்கள்.*

**சி.ஐ.டி.:** *எதற்காக கூப்பிட்டு அனுப்பினீர்கள்?*

**இன்ஸ்:** *இன்ஸ்பெக்டருக்குத் தெரியாதது, சி.ஐ.டிக்கு புரியலாமல்லவா? ஒரு சிக்கலான கேஸ். அதைச் 'சால்வு' பண்ணத்தான் கூப்பிட்டனுப்பினேன்.*

**சி.ஐ.டி:** *(சிரித்து) உண்மைதான்.*

[ஆறுமுகமும், சுந்தரும் வருகின்றனர்.]

**ஆறு:** *சார்! முன்னே ஒரு 'டிக்கெட் லெஸ் டிராவெலின்' கதையைச் சொல்லலே? அது, இவருதான்!*

**இன்ஸ்:** *அதற்காகவா இப்போ பிடித்துக் கொண்டு வந்தாய்?*

**ஆறு:** *அதுக்கில்லே, சார்! மிட்டாய்க் கடைக்காரத் திரு வேங்கடத்தை கொலே செய்திருக்கிறன்.*

**இன்ஸ்:** *என்ன?*

**சுந்:** *இன்ஸ்பெக்டர்! அவரை நான் கொலேசெய்ய வில்லே. கொலேயும், களவும் செய்த ஒருவன், 'கொலே, கொலே' எனக் கூக்குரலிடுவாளு? அல்லது, கொலே செய்யப்பட்டவரின் பக்கத்தில் நின்றுகொண்டுதான் அழுவாளு? இவை இரண்டையும் செய்துள்ள நான், எப்படிக் குற்றவாளியாக முடியும்?*

**இன்ஸ்:** *ஆறுமுகம்! கொலே செய்யப்பட்டது உனக்கு எப்படித் தெரியும்?*

**ஆறு:** *'கொலே, கொலே' என்ற குரலேக்கேட்டு வீட்டினுள்ளே நுழைஞ்சோம். கையில் கத்தியுடன் மிட்டாய்க் கடைக்காரின் பக்கத்திலே, இவரு அழுதுகிட்டிருந்தாரு.*

**சி.ஐ.டி:** *இன்ஸ்பெக்டர்! அப்படியென்றுல் இவர் குற்றவாளி இல்லே. வேறு ஒருவன்தான் கொலே செய்திருக்கவேண்டும். [**திருமலே வருகிருர்**]*

**திரும:** *இன்ஸ்பெக்டர் சார்! என் பெண் உஷாவை யாரோ ஒருவன் காரில் இழுத்துக்கொண்டுப் போய்விட்டான்.*

**சுந்:** *(தனக்குள்) உஷா!*

**இன்ஸ்:** *அந்தக் காரின் நம்பர் தெரியுமா?*

**திரும:** M. S. L. 3040.

**சுந்:** அந்தக் கார் சின்னுளப்பட்டி ஜமீன்தாருடையது. அவர்கள்தான் கடத்திச் சென்றிருக்கவேண்டும். அங்கே போய்ப் பாருங்கள்.

**இன்ஸ்:** உங்களுக்கு எப்படித் தெரியும்?

**சுந்:** முதலில் போய்ப் பாருங்கள். பிறகு சொல்கிறேன்.

**இன்ஸ்:** ஒன் டொண்டி த்ரீ. எதற்கும் இவரை 'லாக்கப் பில்'வை. (சி.ஐ.டியிடம்) என்னுடன் வாருங்கள். (திருமலையிடம்) நாங்கள் திரும்பி வரும்வரை இங்கேயே இருங்கள்.

[இன்ஸ்பெக்டரும், சி.ஐ.டியும் செல்ல - ஆறுமுகம், திருமலையினிடம்.]

**ஆறு:** மிஸ்டர் திருமலை. முன்னே நம்ப இரண்டு பேரையும் ஏமாத்தின 'டிக்கெட் லெஸ் டிராவலின்' கதியைப் பார்த்தீங்களா?

**திரும:** முதன் முதலிலே மருமகப் பிள்ளையை கம்பிக் குள்ளேயா பார்க்கணும்!

**ஆறு:** நீங்களே உறவு கொண்டாட ஆரம்பிச்சுட்டீங்களா?

**திரும:** நான் ஒண்ணும் ஆரம்பிக்கலே. என் பெண்ணு கொண்டாட வச்சுட்டா! ஆமா, இவருக்கு ஏன் இந்தக் கதி?

**ஆறு:** கொலைக் கேஸிலே மாட்டிக்கிட்டிருக்காரு.

**திரும:** சரிதான்!

**ஆறு:** நீங்க இங்கேயே இருங்க. நான் கொஞ்சம் வெளியிலே போய்விட்டு வரேன். (போகிறுன்)

## 35. நாரதர்

[திருமலையின் வீடு - வாயிற்புறம் இருவர் பேசுகின்றனர். கற்பகம் அதனைக் கேட்பது.]

**ஒரு:** உனக்குத் தெரியுமா கன்னியப்பா! திருவேங்கடம் மிட்டாய்க் கடைக்காரனை, சுந்தர் கொலைசெய்துட்டானும்!

**இர:** உண்மையாகவா?

**ஒரு:** பின்னே நானென்ன பொய்யாச் சொல்வேன்? இந்தக் காலத்திலே நல்லது செய்யறவனுக்கு நேரும் கதியைப் பார்த்தையா?

**இர:** அண்ணனை விடத் தம்பி முன்னேறிவிட்டான்! (மெள்ள) ஸ்டேஷன் மாஸ்டர் திருமலைப் பெண்ணுக்கும், அந்தச் சுந்தருக்கும்கூடத் தொடர்பு உண்டுபோலிருக்குது.

**ஒரு:** நமக்கேன் பெரிய இடத்து வம்பு? வா, போகலாம். (போகின்றனர்)

## 36. கைதி

[மலைவீடு - தூணில் கட்டப்பட்டிருக்கும் உஷாவினிடம், வேதாசலம் பேசுதல்.]

**வேதா:** என்ன உஷா, ஒரு முடிவுக்கு வந்தாயா? ஏன் மௌனம் சாதிக்கிறாய்? மௌனம் சம்மதத்தின் அடையாளம் என்பதை மறந்துவிடாதே. ஓ! ஏன் உன்னை கட்டிப்போட்டிருக்கிறேன் என்று யோசிக்கிறாயா? நீ ஓடிப்போய்விடுவாய் என்ற பயம் எனக்கு எள்ளளவும் கிடையாது. வேறு யாராவது உன்னைக் கடத்திப் போய்விடப் போகிறார்களே என்ற அச்சத்தினால் தான், இந்த அறையையும் பூட்டிவைத்திருக்கிறேன். பேதைப் பெண்ணே! உனக்கு இங்கே என்ன குறைவு? உன் கடைக்கண் குறிப்பறிந்து கண நேரத்தில் நீ இடும் வேலையைச் செய்து முடிக்க ஏவலாள் இங்கே இல்லையா? இல்லை, நான் வயதாகிவிட்டேன்; எனக்குக் காதலிக்கத் தெரியாது என்று நினைக்கிறாயா? என் சொத்து முழுவதும் உனக்குத் தருகிறேன். சரியென்று சொல்.

**உஷா:** உங்கள் காலில் விழுந்து கேட்டுக்கொள்கிறேன். தயவு செய்து என்னை விட்டுவிடுங்கள்.

**வேதா:** அந்தக் கருணைமட்டும் எனக்கிருந்திருந்தால், உன்னை இங்குக் கொண்டுவரச்சொல்லி இருக்கமாட்டேன்.

**உஷா:** என்னை இப்படிச் சித்திரவதை செய்வதில் உங்களுக்கு என்ன லாபம்?

**வேதா:** (சிரித்து) உங்களுக்கென்னலாபம்! உன் உடல் ஊடலுக்கேற்ப வளர்ந்துவிட்டதே தவிர, அறிவு வளரவில்லை!

**உஷா:** இவ்வளவு வேண்டுகிறேனே, உங்கள் மனம் கரையாதா?

**வேதா:** பேச்சைத் திருப்பிப்பார்! நானும் உன்னை எவ்வளவு பணிவோடு வேண்டுகிறேன். (நெருங்குகிறன்)

**உஷா:** என் வாழ்வைப் பாழாக்காதே!

**வேதா:** பேசுவதற்கு ஆட்களில்லாமல் உன்னுடன் நான் பேசிக்கொண்டிருக்கவில்லை. என் விருப்பத்திற்கு இணங்காவிட்டால், (ஆப்பிள் பழத்தை இரண்டாகச் சீவி) இதன் முடிவுதான் உனக்கும் என்பதை தெரிந்துகொள். (ஜன்னலின் வழியாகப் போலீஸ் வருவதைப் பார்த்து கீழே வருகிருர்.) என்ன இன்ஸ்பெக்டர்! என்ன வேண்டும்? ஒரு வார்த்தைச் சொல்லி அனுப்பியிருந்தால், நானே ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனே!

**இன்ஸ்:** வேறென்றுமில்லை. திருடன் ஒருவன் வந்து இங்கு ஒளிந்துகொண்டிருக்கிறன். கண்டுபிடிக்கவேண்டும்.

**வேதா:** திருடஞ! என் வீட்டினுள் அவ்வளவு எளிதில் ஒருவனும் நுழைந்துவிட முடியாது.

**இன்ஸ்:** இருந்தாலும் பார்த்துவிட்டால் நல்லது.

**வேதா:** வீட்டைச் சோதனைப்போட நான் அனுமதிக்க மாட்டேன்.

**இன்ஸ்:** மிஸ்டர் வேதாசலம்! நீங்கள் ஜமீன்தாராக இருக்கலாம். நாங்கள் யார் என்பது தெரியுமல்லவா?

**சி.ஐ.டி:** வீண் பேச்சு எதற்கு? மாடிக்குப் போகலாம்.

**இன்ஸ்:** (மாடியில்) இந்த அறையைச் சோதனைச் செய்ய வேண்டும்.

**வேதா:** இது என் பூசை அறை! செருப்புக் காலுடன் உள்ளே செல்லக்கூடாது.

**சி.ஐ.டி:** கடவுள் பக்திகூட உங்களுக்கு இருக்கிறதா!

**இன்ஸ்:** ஊம். திறவுங்கள்.

**சி.ஐ.டி:** (அறையினுள்ளே) இந்த அறுந்த கயிரையும், கத்தியையும் பார்த்தீர்களா?

**வேதா:** இந்தக் கயிர் சுண்டெலியினால் கடிக்கப்பட்டிருக்கிறது.

**சி.ஐ.டி:** சுண்டெலி இல்லை, ஜமீன்தார்; பெருச்சாளியின் வேலை இது!

**இன்ஸ்:** (சி.ஐ.டியிடம்) என்ன நினைக்கிறீர்கள?

**சி.ஐ.டி:** உஷா கயிற்றால் கட்டப்பட்டிருக்கிறாள். நாம் வருவதைக் கண்ட வேதாசலம் கீழே வந்தவுடன், அருகிலிருந்த கத்தியின் உதவியால் கயிற்றை அறுத்துக்கொண்டு வெளியேறி யிருக்கிறாள். அதோ, ஜன்னல்கூடத் திறந்திருக்கிறது. அதன் வழியாகத் தான் வெளியேறி இருக்கவேண்டும்.

**இன்ஸ்:** என்னுடன் நீங்கள் வந்தது பெரும் உதவியாக இருக்கிறது.

**சி.ஐ.டி:** பூட்டுங்கள் இவர் கையில் காப்பை.

**வேதா:** அநியாயம், அக்கிரமம். குற்றமில்லாதவனையா, குற்றவாளியாக்குவது? இங்கே ஒரு பெண்ணும் வரவில்லை.

**இன்ஸ்:** ஊம். கிளம்புங்கள். (போகின்றனர்)

## 37. நன்னம்பிக்கை

[திருமலையின் வீடு - கற்பகமும், உஷாவும்.]

**உஷா:** அத்தே!

**கற்ப:** உஷா! யார் உன்னை இழுத்துச் சென்றவன்?

**உஷா:** சின்னுளப்பட்டி ஜமீன்தாரின் கையாள் ஒருவன். உடனே அவனைப் போலீசிலே ஒப்படைக்கவேண்டும். அப்பா எங்கே?

**கற்ப:** (தனக்குள்) சின்னுளப்பட்டி ஜமீன்தாரா! (உஷா விடம்) உன்னைப் பற்றித் தெரிவிக்கத் தான், அப்பா போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருக்கிருர்.

**உஷா:** (கலக்கத்துடன்) இந்த விஷயத்தை சுந்தர் அறிந்தால் என் கற்புக்குக் களங்கம் ஏற்பட்டதாக நினைத்துக் கொள்ள மாட்டாரா, அத்தே?

**கற்ப:** உன் கற்புக்குமட்டும் களங்கம் ஏற்பட்டதாக நினைக் காதே, உஷா. சுந்தரின் மானத்திற்கும்தான் மாட் சிமை குறைந்துவிட்டது. திருவேங்கடத்தைக் கொலை செய்ததிஞல், போலீசாரால் கைது செய்யப்பட்டிருப்ப தாகச் சற்றுமுன் கேள்விப்பட்டேன்.

**உஷா:** அத்தே!

**கற்ப:** வருந்தாதே. போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் நடந்தவற்றையெல்லாம் விபரமாகத் தெரிவி.

**உஷா:** இனி தெரிவிப்பதில் என்னப் பயன்? நான் யாருக் காக வாழவேண்டுமென்று நினைத்தேனே, அது நிறை வேருமல் போய்விட்டது. அத்தே! அவர்தான் கொலை செய்திருப்பார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?

**கற்ப:** அட, பைத்தியமே! என் காதுக்கு எட்டியதைச் சொன்னேன். சுந்தரின் குணம் எனக்குத் தெரி யாதா? முதலில் நீ போலீஸ் ஸ்டேஷனுக்குப் போ; பின்னுல் நான் வருகிறேன். (உஷா போகிருள்)

## 38. சிரிக்காதே

[போலீஸ் உடையில் கேடி கந்தசாமி, அவன் வீட்டில் கண்ணனுடன் பேசுதல் - ஆறுமுகமும், மற்றொரு போலீஸ்காரனும் கள்ள உடையில் வருகின்றனர்.]

**கந்த:** யாரைக் கொன்ருல் என்னங்க? கொடுத்தப் பணத்தை திருப்பிக் கேட்டா நல்லாயில்லே.

**கண்:** சுந்தரைக் கொலை செய்யச் சொன்னால் திருவேங் கடத்தையா தீர்த்துக் கட்டுவது? அதில் எங்களுக்கு என்ன லாபம்?

**கந்த:** இரண்டு பேரும் முகத்தை மூடிக்கிட்டுத் தூங்கவே தவறு நடந்திடுச்சு. இவ்வளவு நாளா உங்க வேலை யெல்லாம் 'கரெக்டா' செய்துகிட்டு வரத்துக்கு இனாமாகவே ஆயிரம் ரூபா கொடுக்காமெ, கொடுத்த பணத்தைத் திருப்பிக் கேட்கிறீங்களே! பாதிப்பணம் வேணுமானா கொடுக்கிறேன்.

**கண்:** பேசாதே. யாரோ வருகிறார்கள்.

**கந்த:** (ஆறுமுகத்தினிடம்) அண்ணே! என் உடையைப் பார்த்து பயப்படாதே! நான் கேடி கந்தசாமி.

**ஆறு:** போங்க அண்ணே! என்ன விளையாட்டு? உங்களைப் பார்த்ததும் என்ன கிலி எடுத்துடுச்சுத் தெரியுமா?

**கந்த:** எப்படி அண்ணே, என் மூளை வேலைசெய்யுது?

**ஆறு:** இதிலே என்ன ஆச்சரியம்? போலீஸ்காரங்களை விடத் திருடன்களுக்குத்தானே மூளை அதிகம்! (கண் ணனைப் பார்த்து) யார் அண்ணே இவரு? ஏதோ, சண்டை போட்டுகிட்டிருந்தையே.

**கந்த:** இவரு சின்னாளப்பட்டி ஜமீன்தாரோட கையாள். மிட் டாய்க் கடைக்காரத் திருவேங்கடத்தின் வீட்டிலிருந்த ஜமீன்தாரின் தம்பியை கொலை செய்ய, ஐநூறு ரூபா யிலே 'புக்' செய்தாரு. நான் தவறா மிட்டாய்க் கடைக் காரரே கொலை செய்துட்டேன். செய்த தப்பை ஒத்து கிட்டு, கொடுத்த பணத்திலே பாதியைக் கொடுக் கிறேன்னா முழு பணத்தையும் திருப்பிக் கேட்கிறாரு.

**ஆறு:** செய்த தவறைச் சொல்லாமெ, பணத்தைத் தட்டி கிட்டுப் போவையா! பைத்தியக்காரத்தனம் செய்துட் டையே. கள்ளத்தனம் செய்தாலும் கண்மூடித்தன மாகச் செய்யக்கூடாது.

**போலீஸ்:** (கண்ணனை) மரியாதையா பாதிப் பணத்தை வாங்கிக்கிட்டுப்போ.

**கண்:** உன் பயமுறுத்தலுக்கு அஞ்சுபவன் நானல்ல.

**கந்த:** சரி. முழுப் பணத்தையும் கொடுத்திடலாம். ஏன் அண்ணே, இன்னிக்கி ரொம்ப லாபமா? மூட்டைப் பெரிசா இருக்குதே!

**ஆறு:** ஆமாம். இன்னிக்கி காலையிலே எழுந்திருக்கச்சே நரி மொம்மை முகத்திலே விழிச்சேன். நிறைய பொன்னு, வெள்ளி, இரண்டு கொலைகாரப் பசங்க ளெல்லாம் கிடைச்சாங்க! (உடையை நீக்குதல்)

**கண்:** போலீசா!

**கந்த:** ஐயோ!

**ஆறு:** நடங்கடா, திருட்டுப் பசங்களா! (போகின்றனர்)

## 39. அந்தநாள்

[சத்தியபுரம் போலீஸ் ஸ்டேஷன் - வேதாசலத்தை அழைத்து வருகின்றனர்]

**திரும:** இன்ஸ்பெக்டர்! அங்கே என் பெண் இல்லையா?

**இன்ஸ்:** அங்குத்தான் இருந்திருக்கிருள். ஆனல், தப்பி போயிவிட்டாள்.

[உஷா வருகிருள்]

**உஷா:** அப்பா!

**திரும:** உஷா! இவள் தான் சார் என் பெண்.

**இன்ஸ்:** (வேதாசலத்தைக் காட்டி) இவர்தானே உங்களை இழுத்துச் சென்றது?

**உஷா:** இவனில்லை. இவனுடைய கையாள் ஒருவன்.

**சி.ஐ.டி:** எப்படித் தப்பினீர்கள்?

**உஷா:** கயிற்றினல் கட்டிவிட்டால் ஓடிவிட முடியாது என்று நினைத்தான் இந்தக் கயவன். அவசரத்தில் என் காலினடியில் இவன் போட்டுவிட்டுச் சென்ற கத்தி யின் உதவியினுல், இவன் கண்ணைக் குத்திவிட்டேன்.

**இன்ஸ்:** (சி.ஐ.டி. யிடம்) நீங்கள் சொன்னது போலத்தான் நடந்திருக்கிறது.

**உஷா:** (சுந்தரிடம்) சுந்தர்! பிழை செய்வோரைக் கண்டிக் கும் உங்களுக்கேன் இந்தத் தண்டனை? உண்மையில் நீங்கள், திருவேங்கடத்தைக் கொலை செய்தீர்களா?

**சுந்:** என்னுடன் பழகிய நீயுமா என்னைச் சந்தேகிக்கிருய்? இன்னும் சிறிது நேரத்தில், கொலைகாரன் நான் இல்லையென்பது உறுதியாகிவிடும் பார்.

[கற்பகம் வருகிருள்]

**கற்ப:** இன்ஸ்பெக்டர்! சுந்தர் கொலையாளி இல்லை என்பதை நான் நிரூபிப்பேன்.

**வேதா:** (தனக்குள்) கற்பகம்!

**இன்ஸ்:** சொல்லுங்கள்.

**கற்ப:** (வேதாசலத்தைக் காட்டி.) இவன் ஒரு கைதி. பெயர் திகம்பரம் நான்கு வருடங்களுக்கு முன்பு ஒரு நாள் சிறையில் உணவு கொண்டுவந்து கொடுப்பவனின் வாயை அடைத்து, அவனது உடையை அணிந்து கொண்டு வெளியேறினுன். விஷயமறிந்த அதிகாரிகள் தேடினர். ஆனுல், கண்டுபிடிக்க முடியாமல் திரும்பினர். இளம் வயதிலேயே உற்ருர் உறவினர் அற்று வாழ்ந்துவந்த என் வீட்டினுள் புகுந்தான். நான் கூக்குரலிட்டேன். கையைப் பிடித்தான். கள்வனின் கரம் உடலில் பட்டதும் உணர்ச்சிவசமாக்கப்பட்டேன். காலை மாடு துரத்திவந்ததாகப் பொய் கூறினுன். அதை உண்மையென நம்பினேன். இருவரிடையே நட்புவளர்ந்தது. சிறிது நாட்களுக்குப் பிறகு, இவன் கள்வன் என்பதை அறிந்தேன். கைப்பிடித்தவனைக் காட்டிக் கொடுக்க இசையாமல், கள்ளத்தனமாகக் காலம் தள்ளிேனும். கஷ்டகாலம் சின்னுளப்பட்டி ஜமீன்தார்வேதாசலத்திடம் கடன்வாங்க நேரிட்டது. வட்டிப் பணத்தைக் கேட்க ஒருநாள், ஜமீன்தார் தன் கையாள் கண்ணனுடன் வீட்டிற்கு வந்தார்:—

[தனித்திருக்கும் திகம்பரத்தினிடம், வேதாசலம் பேசுதல்.]

**வேதா:** எப்போது பணத்தைத் திருப்பிக்கொடுக்கப் போகிருய்?

**திகம்:** கொஞ்சம் பொறுங்க. கூடிய சீக்கிரம் மொத்தப் பணத்தையும் திருப்பித் தந்துவிடுகிறேன்.

**வேதா:** வட்டிப் பணத்தைக் கொடுக்கக்கூட யோக்கியதையில்லாத நீ, முழுப் பணத்தையும் கொடுத்துவிடப்

போகிருயா? மரியாதையாக ஐந்து மாத வட்டிப் பணத்தையும் வை.

**திகம்:** என்னை நம்புங்க. வேலை கிடைத்ததும் வயிற்றுக் கில்லாமெ போனாலும், உங்கப் பணத்லைதக் கொடுத்து விடுகிறேன். (காலில் விழுதல்)

**வேதா:** சீ, நாயே! உன்னைப் பார்த்து எவன் வேலை கொடுப்பான்?

**திகம்:** என்ன சொன்னே? (வேதாசலத்தை அடிக்க, இருவரின் சண்டையில், வேதாசலம் கொலை செய்யப் படுதல்) ஒழிந்தான்!

**கண்:** (வெளியிலிருந்து வந்து) கொலை! கொலை!!

**திகம்:** சத்தம் போடாதே! உனக்கு வேண்டியதைத் தரு கிறேன்.

**கண்:** ஜமீன்தார் கொலை செய்யப்பட்டது வெளியில் தெரிந்தால் ........

**திகம்:** தெரியாமலிருக்க நீதான் வழி செய்யவேண்டும்.

**கண்:** (திகம்பரத்தைப் பார்த்து) உங்கள் முகத்தைக் கண் ணுடியில் பாருங்கள். (திகம்பரம் பார்த்தபின்) ஜமீன் தாரின் முகத்தைப் பாருங்கள்.

**திகம்:** இரண்டு முகங்களும் ஒன்ருகத்தான் இருக்கின்றன.

**கண்:** (சிரித்து) இனி நீங்கள்தான் ஜமீன்தார் வேதாசலம்!

**திகம்:** அது முடியாது!

**கண்:** ஏன்?

**திகம்:** என் கால் ஊனம்.

**கண்:** இதற்கா பொய் சொல்ல முடியாது? மாடிப்படியி லிருந்து ஜமீன்தார் தடுக்கி விழுந்துவிட்டார். அதனுல், ஊனம் ஏற்பட்டு விட்டதாகச் சொன்னுல், உண்மை யென மக்கள் நம்பிவிடுகின்றனர். உங்கள் அதிருஷ்டம் ஜமீன்தாரின் தம்பிகூட லண்டன் சென்றிருக்கிருன். அவன் திரும்பிவர, இன்னும் நாலு வருஷமாகும். அதற்குள் எல்லாவற்றையும் நாம் சமாளித்து விடலாம்.

**திகம்:** சரியான யோசனை. உனக்கு நான் என்றும் கடமைப்பட்டவன்.

**கண்:** வேலை சீக்கிரம் முடியட்டும். வருகிறேன்.

[போலீஸ் ஸ்டேஷனில் கற்பகம்.]

**கற்ப:** பச்சை நோட்டுகளுக்கு ஆசைப்பட்டுப் பாபச் செயலில் பங்கெடுத்துக்கொண்டான் கண்ணன்.

**சி.ஐ.டி:** அப்போது நீங்கள் வீட்டிலில்லையா?

**கற்ப:** வெளியில் சென்றிருந்த நான், ஜமீன்தார் கொலை செய்யப்பட்ட பிறகுதான் வீடு திரும்பினேன்:—

[திகம்பரம், ஜமீன்தாரின் உடையில் இருக்கிறான்-கற்பகம் பேசுதல்.]

**கற்ப:** வாங்க ஜமீன்தார்! வந்து ரொம்ப நேரமாகிறதா?

**திகம்:** இப்பொழுதுதான் வந்தேன். உங்க புருஷன் வீட்டிலில்லையா?

**கற்ப:** நான் வெளியிலே போகும்போது இருந்தார். ஒரு வேளை வெளியிலே போய்விட்டாரோ, என்னவோ!

**திகம்:** கற்பகம். (கையைப் பிடித்தல்)

**கற்ப:** சண்டாளா! என் கணவர் இல்லையா யென்று இதற்குத்தான் கேட்டாயா? உன் உயிரின்மேல் ஆசை இருந்தால் என் கணவர் வருவதற்கு முன்பு ஓடிவிடு.

**திகம்:** போக முடியாது. உன் கணவன் வரட்டும். (உடையை நீக்குதல்)

**கற்ப:** நீங்களா! இது என்ன வேஷம்?

**திகம்:** கற்பகம்! நீ என்னிடத்தில் வைத்திருக்கும் அன்பையும், பாசத்தையும் அறிந்தேன். நமது உறவு என்றும் நிலைத்து, நீ மஞ்சள், குங்குமத்துடன் வாழ வேண்டுமானால், இனிமேல் நான் ஜமீன்தாரின் வேடத்தில்தான் உலாவ வேண்டும்.

**கற்ப:** என்ன சொல்கிறீர்கள்?

**திகம்:** உன்னால் என்னைச் சிறிதும் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லையே?

**கற்ப:** முடியவில்லை!

**திகம்:** எல்லாம் விபரமாகச் சொல்கிறேன், வா.

[போலீஸ் ஸ்டேஷனில் கற்பகம்]

**கற்ப:** குடிசையில் வாழ்ந்துவந்த எங்களுக்குப் பங்களா வாழ்க்கை தொடங்கியது. ஒருவரும் எங்களைச் சந்தேகிக்கவில்லை. ஆனால், என் மனம் மட்டும் அச்சத்தினால் அலைபாய்ந்து கொண்டிருந்தது. அவர்களைக் காட்டிக் கொடுக்க மாட்டேனென்று, கடிதம் ஒன்றை எழுதி வைத்துவிட்டு, நான் தனித்து வந்துவிட்டேன். (திருமலையைக் காட்டி) தண்டவாளத்தின் பக்கத்தில் மயக்கமுற்றுக் கிடந்த என்னை இவர்தான் காப்பாற்றி, தாயில்லாத் தன் பெண்ணிற்குத் துணையாக இருக்குமென்று தன் வீட்டில் அடைக்கலம் தந்தார்.

**திரும:** உண்மைதான். இவங்க என் சொந்த தங்கை இல்லை.

**இன்ஸ்:** *(வேதாசலத்தை)* இப்பொழுதாவது குற்றத்தை ஒப்புக்கொள்ள முடியுமா?

**வேதா:** இவள் சொன்னது முழுவதும் பொய். இவளை எனக்குத் தெரியாது.

**சி.ஐ.டி.:** *(கற்பகத்தினிடம்)* இவரைத் தெரியும் என்பதற்கு அடையாளம் சொல்ல முடியுமா?

**கற்ப:** முதுகின் வலதுபுறம் வெட்டுக்காயம் ஒன்று இருக்கிறது.

**இன்ஸ்:** *(முதுகைப் பார்த்து)* ஆமாம். இருக்கிறது. இவன் தான் முன்பு தப்பியோடின கைதி திகம்பரம்.

[ஆறுமுகம், கந்தசாமி, கண்ணன் வருகின்றனர்.]

**சி.ஐ.டி.:** (ஆறுமுகத்தை) யார் இவர்கள்?

**ஆறு:** *(கந்தசாமியை)* இவன்தான் மிட்டாய்க் கடைக்காரத் திருவேங்கடத்தைக் கொலை செய்தவன்.

**உஷா:** *(கண்ணனை)* என்னை இழுத்துச் சென்றது இவன் தான்.

**கந்த:** இன்ஸ்பெக்டர்! நான் உண்மையைச் சொல்றேனுங்க. *(கண்ணனை)* இவர்தானுங்க *(சுந்தரை)* இவரைக் கொலைசெய்யச் சொன்னது. நான் தவறாக மிட்டாய்க் கடைக்காரரைக் கொலைசெய்துட்டு, இவரு எழுந்துடவே. (சுந்தர்) கட்டிலின் கீழே ஒளிந்து

கொண்டேன். போலீஸ்காரங்க இவரை (சுந்தர்) பிடிச்சுகிட்டுப் போனதும், ஓடிப்போய்விட்டேன். என்னை மன்னிச்சுடுங்க. நான் பிள்ளை குட்டிக்காரன்.

**இன்ஸ்:** (கண்ணனை) இவரைக் கொலை செய்யச் சொல்லக் காரணம்?

**கண்:** என்னைக் கேள்விகள் கேட்கவேண்டாம். உங்கள் இஷ்டம் போல், எது வேண்டுமானாலும் செய்யுங்கள்.

**திகம்:** (கலக்கத்துடன்) இனி விசாரணை செய்ய வேண்டாம். நான்தான் குற்றவாளி! அன்று போலீஸ் கண்காணிப்பிலிருந்து தப்பியோடின கைதி திகம்பரமும் நான்தான்; ஜமீன்தார் வேதாசலத்தைக் கொலைசெய்தவனும் நான்தான். தன் அண்ணன் போலிருக்கவே சுந்தரும் என் பேரில் சந்தேகம் கொள்ள வில்லை. போலி வேடதாரிகளின் சதி ஒருநாள் அம்பலமாகுமென்பது உண்மையாகிவிட்டது. ஏன், எல்லோரும் என்னை இப்படிப் பார்க்கிறீர்கள்! நாடகம் போல் இருக்கிறதே என்று? இல்லை. உண்மையில், கள்வன், சதிகாரன், சமூகத் துரோகி ஒருவன் தன் குற்றத்தை உணர்ந்து கண் கலங்கித் திருந்திக் கொள்கிறன். சுந்தர் என்னை மன்னித்துவிடப்பா!

**சுந்:** யார், யாரை மன்னிப்பது? செய்த குற்றத்தை உணர்ந்து திருந்தியதே போதும்.

**திகம்:** உண்மையில் நீதான் மனிதன். மனித இனத்தின் விலையில்லா மாணிக்கம். இவள் (உஷா) மலைவீட்டிற்குக் கடத்திவரப்பட்டாளே அன்றி, அவள் கற்பிற்குச் சிறிதும் களங்கம் ஏற்படவில்லை. உன்னால் இவள் நேசிக்கப்பட்டவள் என்பதை இப்பொழுது தான் அறிந்துகொண்டேன். இவளை ஏற்றுக்கொள்.

**இன்ஸ்:** (திகம்பரத்தினிடம்) நீங்கள் செய்துள்ள குற்றத்திற்கு என்ன தண்டனை தெரியுமா?

**திகம்:** தெரியும். குற்றவாளி குற்றம் புரியும் அன்றே அதன் தண்டனையும் அறிகிறன். எனக்கு மரண தண்டனை தான்!

**கற்ப:** ஐயோ! (மயக்கமாகக் கீழே விழுதல்)

**உஷா:** அத்தே!

**திரு:** கற்பகம்!

**திகம்:** கற்பகம்! கறபகம்! [illegible] கற்பகம்!! என்னை மன்னித்துவிடு தாயே; என்னை மன்னித்துவிடு. நான் ஜமீன்தார் வேதாசலமில்லை; திருந்திய திகம்பரம். ஆசை வலை விரித்த ஆடலரசிகளின் அழகில் சிக்கினேன்; ஆதிக்கவரி தலைதரிக்க ஆடினேன். என் பொற் சித்திரமே! உன்னை நன்ருகப் புரிந்து கொள்ளாமல் போன இந்த மூடனைப் பார். அன்று ஆபத்தில் உதவிகேட்ட உன் திகம்பரத்தைப் பார். இந்தக் கயவனைப் பார். பார்க்கமாட்டாயா? நீ எப்படிப் பார்ப்பாய் - பேசுவாய்? நான்தான் உன்னைக் கொன்றுவிட்டேனே! என் தண்டனையைக் கேட்ட மாத்திரத்தில் கண் அயர்ந்து விட்டாய் நீ. உன் மறைவை எண்ணி, அணு அணுவாக ஏங்கித் தவிக்கப்போகிறேன் நான். என் அகக் கண்களைத் திறந்த என் வாழ்வின் **அருணேதயம்** நீதான், கற்பகம்! நீதான்! (சிறிது நேரம் கழித்து) வா, கண்ணு! இனி நம் நாடகம் முடிந்துவிட்டது.

**சுந்:** அண்ணு!

**திகம்:** என்னை அண்ணுவென்று அழைக்காதே! உன் அண்ணு ஒரு மேதை. நீ கற்றவன்; சட்ட திட்டங்கள் தெரிந்தவன். உன் போன்றவர்கள் நேர்மையை நிலை நிறுத்தாவிட்டால், என்போன்ற படிக்காத குறுகிய புத்தியுடையவர்களின் கையில் நாடு அகப்பட்டு நாசமாகிவிடும். கலங்காதே. போகலாம் இன்ஸ்பெக்டர். (போகின்றனர்)

**ஆறு:** (கந்தசாமியை) உங்க வாழ்க்கையும் இனி பூக்காத புஷ்பமாயிடுச்சு, நடங்க!

## 40. அருணேதயம்

**[மலைவீடு - சுந்தரும், உஷாவும் மணக்கோலத்தில் அவர்களின் வாழ்வுக்கு அருணேதயமாக விளங்கிய கற்பகத்தின் படத்திற்கு மாலை அணிவித்து நன்றி - வணக்கம் செலுத்துகின்றனர்.]**

